

# வடநாட்டில் இந்து - முசிலிம் போர்



வடநாட்டில் இந்து-முசிலிம்களுக்கிடையே வேற்றுமை யுணர்வும், பிணக்கும், போரும் எந்தவகையில் மூண்டெழுந்து காணப்படுகின்றன என்பதை, அறிந்து கொள்ளும் வாய்ப்பு, அறிஞர் அண்ணு அவர்களுக்கு, அவர் பெரியார் இராமசாமி அவர்களோடு வடநாட்டுச் சுற்றுப் பயணத்திற்குச் சென்றிருந்தபொழுது ஏற்பட்டது.

உண்ணுவது, நீர்அருந்துவது, உறைவது, வாணிகம் செய்வது ஆகியவற்றில் இந்துவும்—முசிலிமும் ஒருவரையொருவர் பகைத்துக்கொண்டு, வேற்றுமை பாராட்டித் தனித்தனியே அவற்றைத் தத்தமதாகக் கொண்டிருந்த தன்மையை அண்ணு அவர்கள் கண்டபோது, படித்தறியாப் பண்பறியாப் பாமர மக்களிடத்தில் மட்டுமே அந்த நிலைமை நிலவி வருவதாக நினைத்துக்கொண்டார்கள். அந்த நிலைமை பாமர மக்களிடத்தில்மட்டும் நிலவவில்லை அது படித்தவர்களிடத்திலும் உண்டு என்பதை அவர்கள் ஜும்மா மசூதிக்குச் செல்லும்போது அறிந்துகொண்டார்கள்.

அறிஞர் அண்ணு அவர்கள் சுற்றுப்பயணம் செய்தபோது அவர்களுக்கு வழி காட்டிகளாக இருக்கும்பொருட்டு இரண்டு எம். ஏ. படித்த மாணவர்களை தோழர் எம். என். ராய் அண்ணுவுடன் அனுப்பிவைத்திருந்தார். அவ்விருவரில் ஒருவர் முசிலிம், மற்றெருவர் இந்து. இருவரும் தோழர் ராயின் முற்போக்குக் கருத்துக் களில் ஊறித்திளைத்தவர்கள். மசூதியின் மண்டபத்தில் சிலபல ஓட்டைகள் காணப் பட்டன. அவற்றிற்கான காரணம் என்ன என்பதை அண்ணு அவர்கள் முசிலிம் மாணவரோடு சுற்றிப் பார்த்துக்கொண்டிருக்கும்போது கேட்டார்கள்; அதற்கு அந்த முசிலிம் மாணவர் "இந்த ஓட்டைகள் இருந்த இடத்தில் பழையகால முசிலிம் மன்னர்கள் விலையுயர்ந்த கற்களைப்பதியவைத்திருந்தனர். அவற்றையெல்லாம் இந்துக்கள் திருடிக்கொண்டுபோய்விட்டார்கள். அவைகள் பெயர்க்கப்பட்ட இடங்கள்தாம் இப்பொழுது ஓட்டைகளாகத் தென்படுகின்றன" என்று கூறினராம். சிறிதுநேரங்கழித்து இந்து மாணவரோடு வேறுபக்கம் சுற்றிப்பார்த்துக்கொண் டிருக்கும் வாய்ப்பு அண்ணு அவர்களுக்கு ஏற்பட்டது. அண்ணு அவர்கள் மண்ட பத்திலிருந்த ஓட்டைகளைச் சுட்டிக்காட்டி "இந்த ஓட்டைகளுக்கு என்ன காரணம்?" என்று கேட்டார்களாம். அதற்கு அந்த இந்து மாணவர் "இந்த ஓட்டைகள் இருக்கும் இடங்களில் முன்பு விலையுயர்ந்த கற்கள் பதிக்கப் பெற்றிருந்தன. முசிலிம் மன்னர்கள் செல்வமிழந்து வறுமையுற்றபோது அவைகளையெல்லாம் பெயர்த் தெடுத்து விற்று வாழத் தொடங்கினர்கள் ஆகையினுல் அக்கற்கள் இருந்த இடங்கள் இப்பொழுது ஓட்டைகளாகத் தென்படுகின்றன" என்று விடை யிறுத்தாராம்.

படித்த முற்போக்கு எண்ணங்கொண்ட இரு மாணவர்களிடையே, ஒரு குறிப் பிட்ட பொருள் குறித்து விளக்கம் கூறுவதில், இந்து-முசிலிம் வேற்றுமையுணர்ச்சி இந்த அளவுக்குக் காணப்படுகின்றது என்ருல், மற்ற பாமரமக்களிடத்தில் எந்த அளவுக்கு அது கொழுந்துவிட்டு எரியவேண்டும் என்பதை அறிஞர் அண்ணு அவர்கள் தெளிவுபடுத்திக்கொண்டார்களாம். இத்தகைய நிலைமையைப் புரிந்து கொண்ட அண்ணு அவர்கள் பாக்கித்தான் பிரிவினை எப்படியும் ஏற்பட்டேதீரும் என்ற கருத்தையும், அதற்கானமுறையில் காணப்பட்ட சூழ்நிலையையும் பெரியா ரிடமும், பிறரிடமும் தெள்ளத்தெளிவாக விளக்கிக்காட்டினர்களாம்.




மலர் 5 ★ (1—6—56) ★ இதழ் 3

# மாநில மாநாடு!

திருச்சி மாநில மாநாடு இனிதாக, வெற்றிகரமாக நடந்தேறியது!

திராவிட முன்னேற்றக் கழகத்தின் இரண்டாவது மாநில மாநாடு! கழகத்தின் எட்டாண்டு வளர்ச்சியில் இரண்டாவது கட்டம்! மக்களின் ஆதரவு கழகத்திற்கு எவ்வளவு அதிகமான அளவுக்குப் பெருகி வந்துள்ளது என்பதற்குக் கிடைத்துள்ள நற்சாட்சிப் பத்திரம்! "கழகம் வளர்ந்துவிட்டது, கழகத்தின் கொள்கைகளுக்கு நாட்டில் செல்வாக்கு வந்துவிட்டது!" என்பதை, காணுதகண்ணினருக்கும், கேளாத காதினருக்கும் நன்று தெளிவுறுத்த மாநில மாநாடு வந்தது! மாமாங்கத்திற்கும் மாசிமகத்திற்கும், கிருத்திகைக்கும் கிருஷ்ணஜயந்திக்கும் நாட்டில் மக்கள் கூடுகின்றனர்! ஆருத்திரா தரிசனம் செய்ய, அண்ணுமலை தீபம்காண ஆயிரக்கணக்கில் வருகிருர்கள், அதையும் நாம் அறிவோம்! மகான்கள், மடாதிபதிகள், சாதுக்கள், சடாமுடிதாரிகள், சங்கராச் சாரியார்கள், சாம்பல்பூசிய எத்தர்கள்யார்தோன்றினும் இந்தப்புண்ணியபூமியில் கூட்டம் சேர்ந்துவிடும்! நமது மாநில மாநாட்டில் அற்புதமோ அதிசயமோ எதுவுமே கிடையாது; மகான்களோ, மாதேவர்களோ தரிசனம்தரவில்லை. சாமான்யர்கள் வந்தார்கள், கொள்கை விளக்கம் தந்தார்கள்! தில்லைக்கும் திருவண்ணுமலைக்கும் செல்பவன், தன்னுடைய கஷ்ட நஷ்டங்களை ஆண்டவனிடம் முறையிட்டு அதற்கு ஈடுகாணும் எண்ணத்துடன் போகிருன்! இந்த மாநாட்டுக்கு வந்தோர் கொள்கைப்பற்று காரணமாக வந்தனர், இலட்சிய விளக்கம் கேட்டனர், திட்டங்கள் தீட்டினர், எதிர்கால நடவடிக்கைகளுக்குச் சட்டக்கள் வகுத்தனர்! தன்னுடைய சொந்த நலிவைப் போக்கிக்கொள்ள அல்ல; தாயகத்துக்கு ஏற்பட்டுள்ள நலிவைப் போக்க, நாட்டு மக்களுக்கு ஏற்பட்டுள்ள இன்னல்களைத் தீர்க்க அவர்கள் கூடினுர்கள்!

1951 இறுதியில் சென்னைப்பூங்காவில் முதல் மாநில மாநாடு கூடியது, அதுவரை கழகம் அடைந்திருந்த வளர்ச்சியை அந்தமாநாடு ஒரு அளவுகோலாக எடுத்துக்காட்டிற்று! இரண்டாவது மாநிலமாநாடு கழகத்தின வளர்ச்சியை இன்றளவு எடுத்துக்காட்டின! மாநிலமாநாட்டுக் காட்சி, கேட்டோர் வியந்தனர், கண்டோர் திகைத்தனர், மாநாட்டு வெற்றிகண்டுமாற்றுக்கட்சியினர்மருண்டனர், நம்மனோர் மனமகிழ்ச்சியடைந்தனர். மகிழ்ச்சி ஏற்படாதா? மாநாட்டையும் மக்கள் வெள்ளத்தையும், "வள்ளுவர்நகரையும்" அளவளாவிடும் குடும்பத்தினரையும், பார்த்திடும் பொழுது பூரிப்பு ஏற்படாதா?

நான்குஆண்டுகளுக்குப்பின்நான்குநாட்கள்! இடையில் எவ்வளவு தூரம், எவ்வளவு தடைகள்! சென்னை மாநில மாநாட்டிலிருந்து, திருச்சி மாநில மாநாட்டை அடைவதற்குள் வழியில் எவ்வளவு ஆபத்துக்கள், எவ்வளவு சோதனைக்கட்டங்கள்! தடையுத்தரவுகள், தடியடிகள், சதிவழக்குகள், சட்டப்பாய்ச்சல்கள், துப்பாக்கிப்பிரயோகங்கள், இரத்தம், பிணம், கண்ணீர், வேதனை - "கழகத்தை ஒழித்துக் கட்டுவேன்" என்று ஒரு அரசாங்கம் தன்முழு ஆயுத பலத்தையும் வீசியல்லவா கழகத்தை அழித்துவிடமுயன்றது. கழகம் ஒடியவில்லை, நிமிர்ந்தது; வளையவில்லை வளர்ந்தது; அழியவில்லை, உயர்ந்தது! அந்தவளர்ச்சி - தியாகத் தழும்புகள் தந்தமாட்சி, திருச்சி மாநாடாகக் காட்சியளித்தது.

தெளிவான கொள்கை, நேர்மையான போக்கு, கட்டுப்பாடான செயல், கண்ணியம் தவருத அரசியல் நடவடிக்கைகள் - இவைகழகத்தின் வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்தன! அந்த வளர்ச்சியின் ஒரு எடுத்துக்காட்டாக திருச்சி மாநிலமாநாடு அமைந்துள்ளது.

தீர்மானங்கள் பல விவாதிக்கப்பட்டு, நிறைவேற்றப்பட்டுள்ளன. திட்டங்கள் பல தீட்டப்பட்டுள்ளன. ஆய்வுக்குழு நியமிக்கப்பட்டுள்ளது! திருச்சி மாநில மாநாடு நாமடைந்துள்ள வியத்தகு வளர்ச்சியைக்காட்டியது! அதே சமயத்தில் நாம் அடையவேண்டிய வளர்ச்சியின் அளவு இன்னும் அதிகமாக இருக்கிறது என்பதை நாம் மறந்துவிடக்கூடாது! காரணம் நாமெடுத்துக்கொண்ட பொறுப்பு, வகுத்துக்கொண்ட அடிப்படைத் திட்டம் மிகம் பெரியது! கழகம் ஆரம்பித்த நாளில், நாட்டின் விடுதலைத் திட்டத்தை நாம் வகுத்துக்கொண்ட நேரத்தில், "சரியானது என்ருலும், நம்மால் இதுஆகுமா?" என்ற அச்சம் சிற்சில சமயங்களில் தோன்றியதுண்டு. திருச்சி மாநிலமாநாடு அந்த அச்சத்தை நீக்கி "உன்னல் முடியும்" என்று உற்சாகமூட்டுகிறது! மாநாடுதந்த உற்சாகத்தை முன்வைத்து, எதிர்காலத்திட்டங்களை உறுதியுடன் நிறைவேற்றி வெற்றி காண்போமாக!

"இவ்வளவு பெரிய பெட்டியை இங்கு ஏற்ருதே!" வண்டியிலிருந்தவர்களெல்லாம் ஒருமுகமாகச் சத்தமிட்டார்கள்.

"எல்லா வண்டிகளிலும் இப்படித்தான் சொல்லுகிருர்கள், நான் என்ன செய்வது?

"நாங்கள் என்ன செய்வது? நீயே பார்! நான்குபேர்கள் உட்காரவேண்டிய இடத்தில் ஆறுபேர்கள் உட்கார்ந்திருக்கிரும்." என் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர் சொன்னர்.

"நான் உட்காரவில்லை. இந்தப்பெட்டியைப் போட்டு, அதன்மீது உட்கார்ந்து கொள்ளுகிறேன்." பதிலை எதிர்பார்க்காமல் அவர் பெட்டியைச் சன்னல்வழியாக உள்தள்ளினர்.

வேண்டாவெறுப்பாக "எனக்கும்தான்!" என்ருர்.

"நான் பம்பாயிலிருந்து வருகிறேன். அதனுல்தான் தூக்கமில்லை." பம்பாயென்ன, அதற்கப்பால் பாரசீகத்திலிருந்து வந்தால்தான் என்ன. கூட்டத்தின் நெருக்கடி—மாநாட்டுக்குப் போவோரின் கூட்டம் அதைப் பெரிதாக நினைக்கவில்லை. பம்பாய்க்காரருக்குச் சலிப்புத்தட்டியது. "திருச்சிவரைக்கும்தான். அப்புறம் நீங்கள் காலை நீட்டிக்கொண்டு உட்காரலாம்."

"நாங்களெல்லோரும் திருச்சியில் இறங்குகிரும்."

# வள்ளுவர் நகரில்

[சோழன்]

"நாம்தான் மாநாட்டுக்குப் போகிரும். இவர்கள் ஓரிரு நாட்கள் தள்ளிப் போனால் தான் என்ன?" என் எதிரில் இருந்தவர் முணுமுணுத்தார். யாரும் பதில்சொல்லவில்லை. அவரும் பதிலை எதிர்பார்க்கவில்லை.

பெட்டியை சன்னல் வழியாக உள்ளே அனுப்பியவர், அதேவழியில் உள்ளே பிரவேசித்தார். அவர் வருவதற்குள், அவருடைய பெட்டியின்மீது இரண்டுபேர்கள் உட்கார்ந்துவிட்டார்கள். "எனக்கும் உட்காரச்சிறிதுஇடம் தாருங்கள்!" என்று பெட்டியின் உரிமையாளர் கேட்க வேண்டியதாயிற்று.

பெட்டியில் உட்கார அனுமதி கிடைத்ததும், "இரண்டு நாட்களாகத் தூக்கமில்லை" என்று சலிப்புடன் அவர் சொன்னர், மற்றவர்களின் பரிவைப் பெறவேண்டுமென்ற நோக்கத்துடன். பக்கத்திலிருந்தவர்

"அப்படியானல் நீங்களெல்லோரும்........" பெட்டிக்குடையவர் கேட்டார்.

"மாநில மாநாட்டுக்குப் போகிரும்"

"நானும் மாநாட்டுக்குத்தான் போகிறேன். நான் பம்பாய் தாராவி திராவிட முன்னேற்றக்கழகத்தின் பிரதிநிதி!"

அவரும் மாநில மாநாட்டுக்கு வருகிறவர் நம்மைப்போலவே என்றதும், வண்டியினுள் இருந்தவர்கள் முதலிலிருந்த வேற்றுமை நீங்கி, ஒருவருக்கொருவர் நகர்ந்து இடம் கொடுத்துக்கொண்டார்கள்.

வெளியில் ஒரு தோழர் சத்தம்போட்டுக் கொண்டுவந்தார். அந்தக் குரல் பம்பாய்த் தோழரை எழுந்திருக்கச் செய்தது. அப்பொழுதிருந்த கூட்டத்தில், எழுந்திருப்பது, உட்காருவது என்பதெல்லாம் மாபெரும் சாதனைகளாகும்.



"வருக! வருக!"



16-ந்தேதி திருச்சி நிலையத்தில் வரவேற்பு.

"பெட்டி எங்கே?" வெளியில் நிற்பவர் மேல் மூச்சு வாங்கக் கேட்டார்.

"இதோ!"

"சீக்கிரம், எழுந்திருங்கள்!" உட்கார்ந்திருந்தவர்களை எழுந்திருக்கச் செய்தார்.

"ஏன்? ஏன்?" தோழரின் பரபரப்பு மற்றவர்களைக் கவனிக்கச் செய்தது.

"மற்ற வண்டிகளிலெல்லாம் கழகக்கொடி பறக்கிறது. நமது கொடியை எடு!"

மிகவும் சிரமப்பட்டு, பெட்டியைத் திறப்பதற்கான இடம் ஒழித்து, அதன் அடியிலிருந்த கழகக்கொடியை— "பம்பாய் தி.மு.க" என்று பொறிக்கப்பட்ட இருவர்ணக் கொடியை எடுத்து வெளியில் கட்டினர்கள்.

"வண்டி புறப்பட இன்னும் எவ்வளவு நேரமிருக்கிறது?"

"ஒரு மணி நேரம்"

அதற்குள் வண்டி மேற்கொண்டு நிற்க முடியாதபடி நிறைந்துவிட்டது. உலகம் மிகப் பரந்த இடம் என்று சொல்வார்கள். ஆனல் இந்த வண்டியைப் பார்க்கும்பொழுது அந்த எண்ணம் தோன்றுவதில்லை. "மிக நெருக்கடியான கட்டத்திலிருக்கிரும்!" என்று அரசியல் நிபுணர்கள் எச்சரிப்பார்களே, அந்த எச்சரிக்கை நான் ஏறியிருந்த தொடருக்கு பயன்படும். நீராவி முதல் "இஞ்சினிலிருந்து கிளம்பும். இங்கு ஒவ்வொரு வண்டியினுள்ளிருந்தும் வேர்வையின் நீராவி வெளிவந்தது. இந்தப் புழுக்கத்திலிருக்க முடியாது என்று

நானும் என்னுடன் இருந்த மூன்று பேர்களும் இறங்கி பிளாட்பாரத்தில் நின்ரும்.

முதலில் ஒரு தோழர் சொன்னரே, அது சரியாக இருந்தது. வண்டிகளில் முதலிலிருந்து கடைசிவரை கழகப் பெயர் பொறிக்கப்பட்ட கொடிகள் தொங்கின. சற்றுநேரம் காற்றும், மூச்சும் வாங்க நடந்துகொண்டிருந்தோம். அப்பொழுது, ஒருவர் வேகமாக வந்து எங்களைக் கேட்டார். "இந்த வண்டி எங்கே போகிறது?"

"திருச்சிக்கு."

அவர் சிறிது வண்டியைப்பார்த்து "வள்ளுவர் நகருக்குப்போகுமா?" என்று கேட்டார். அவருடைய கேள்வி பக்கத்திலிருந்தவர்களுக்குச் சிரிப்பைத் தந்தது. கேள்விகேட்டவருக்குச் சந்தேகம் வந்தது.

"ஏன் போகாதா?"

"போகும். வள்ளுவர் நகருக்குப்போக திருச்சியில் இறங்கினல்போதும்!"

"நான் ஐதராபாத்திலிருந்து வருகிறேன். இங்கு டிக்கட் வாங்கியபொழுது, வள்ளுவர் நகர் என்று கேட்டேன். அவரும் கொடுத்தாரே!" வாங்கிய டிக்கட்டை அப்பொழுதுதான் அவரும் பார்த்தார். 'வள்ளுவர் நகர்' என்றதும் டிக்கட் விற்பவர் புரிந்துகொண்டு, மறுகேள்வி கேட்காமல் டிக்கட்டைக் கொடுத்துவிட்டார். அவர் அப்படிக் கொடுத்தது, நமது தோழருக்கு, வள்ளுவர் நகருக்குத் தனியாக ரயில் நிலையம் இருக்கிறது என்ற எண்ணத்தை உண்டாக்கியது.

"வந்துவிட்டோம்"



திருச்சி நிலையத்தின்முன் மாநாட்டுப் பிரதிநிதிகளின் அணிவகுப்பு.

"உவந்து அழைக்கும் ஓங்கிய வாயில்"



மாநாட்டின் உள்நுழையும் முதல் வாயில்.

"ஆக, திருச்சி சந்திப்பில் இறங்கினல் வள்ளுவர் நகர் போகலாம்!"

"ஆமாம்! வள்ளுவர் நகர் நாமாக வைத்த பெயர்—உண்டாக்கிய நகரம்! அதற்குத்தனியாக, ரயில்வேஸ்டேஷன் கிடையாது" என்று என்பக்கத்திலிருந்தவர் சொன்னர்.

ஐதராபாத் நண்பர் விடுவதாயில்லை. "ஏன் வைக்கக்கூடாது? காங்கிரஸ்காரர்கள் மாநாடு நடத்தினல் எல்லாவற்றையும் செய்துவிடுகிருர்கள். நமக்கு ஏன் கூடாது? இதற்கு நாம் சண்டைபோடவேண்டும்."

"செய்யலாம் முதலில் இப்பொழுதுபோய் இடம் பிடித்துக்கொள்ளுங்கள்!" என்று அவருக்கு அறிவுறுத்தினேம். அவர் சென்ருர்.

கூட்டம் அதிகமாயிருக்குமென்று நான் எதிர்பார்த்ததுதான். ஆனல் இவ்வளவு நெருக்கடி ஏற்படுமென்று நினைக்கவில்லை. மூன்று நாட்களுக்கு முன்னதாக ரிசர்வு செய்யப்போனபொழுது "எல்லா இடங்களும் திருச்சிவரை நிறைந்துவிட்டன" என்று மிகச் சாவதானமாகச் சொன்னர்கள். "18, 19, 20 தேதிகள்தாம் மிகமுக்கியமான நாட்கள். ஆக 15ந்தேதி கிளம்பினல், கூட்ட நெருக்கடியிலிருந்து தப்பித்துக் கொள்ளலாம்!" என்று மிக முன்யோசனையுடன் நாங்கள் 15ந் தேதி கிளம்பினேம். அதே முன்யோசனை பலருக்கு உண்டானதோ, என்னவோ, அன்று இரயிலில் ஏறவேண்டிய கூட்டத்தைவிட ஐந்து அல்லது ஆறுமடங்கு கூட்டம் ஏறியிருந்தது. உள்ளே நெருக்கடி தாங்காமல், கீழ்வந்துவிட்டோம். மறுபடியும் உள் நுழைவதென்றல், மிகக்கடினமான செயல்தான்!

இந்த "நெருக்கடியான" கட்டத்தில் தோழர் மாறன் காட்சியளித்தார்.

"என்ன, இப்படி நின்றுகொண்டிருக்கிறீர்கள்!"

"இடம் பிடிக்கவேண்டும்."

"சரி! வாருங்கள்!" என்று மாறன் அழைத்துக்கொண்டு, பின் வண்டிகளுக்குப் போனர். ரிசர்வு செய்யப்பட்டிருந்த பெட்டியொன்றில் எங்களுக்கு இடம் கிடைத்தது. மாறன், டி. வி. நாராயணசாமி, செழியன், நாங்கள் குடும்பத்தின் ஒரு சிறு பகுதியானேம்.

கடைசியாக இரயில் நகர்ந்தது. புறப்படும்பொழுது "திராவிட நாடு திராவிடருக்கே!" என்ற வாழ்த்தொலிகள் கிளம்பின- சன்னல் வழியாகத் தலையை நீட்டிப் பார்த்தால், கதவுகளைப் பிடித்துக்கொண்டு படிகளில் மிகப் பலர் தொங்கிக்கொண்டிருந்தார்கள். யாராவது காலிடறி விழுந்து கால்கை முறிந்தால் என்ன செய்வது என்ற அச்சம் உண்டானது. அந்த அளவு மக்கள் கூட்டம், இடமில்லாமல் சென்றது.

வண்டியினுள் இருந்தவர்கள் தங்களை ஒழுங்கு செய்துகொண்டார்கள். மேற்பலகைகளில் ஏறி, சிலர் படுத்துக்கொண்டார்கள். சிலர் தாங்கள் வைத்திருந்த புத்தகங்களைப் படிக்கத் தொடங்கினர்கள், அந்த மங்கிய வெளிச்சத்தில் நான்கு பேர்கள் ஒரு படுக்கையை இழுத்துத் தங்கள் மத்தியில் போட்டு, சீட்டு ஆடத் தொடங்கினர்கள். எப்படியாவது நேரம் போக வேண்டுமே? அவர்கள் சீட்டு ஆடியதில் ஒரு வேடிக்கை. இரண்டு மூன்று ஆட்டங்கள் ஆடியதும், ஒருவர் "நான் கிளாவர் ஒன்பதுக்குக் காத்திருக்கிறேன். அது வரவில்லையே! யார் பிடித்துக் கொண்டார்கள்?" என்று கேட்டார். "என்னிடம் இல்லை!" "என்னிடமில்லை!" என்று மற்றவர்கள் அறிவித்தார்கள். சீட்டுக்களையெல்லாம் ஒன்று சேர்த்துக் கணக்குப் பார்த்தால், "கிளாவர் ஒன்பது சீட்டுக்கட்டில் இல்லவே இல்லை!" ஒரு சீட்டுக்குறைவாக இருக்கிறது.

"இது எனது நகர்"



வள்ளுவர் பார்வையிடுகிருர்.

"என்ன செய்யலாம், தேடிப் பாருங்கள்!" கிடைக்கவில்லை.

"நேரத்தை வீணுக்க வேண்டாம். பக்தவத்சலத்தை எடுங்கள்!" என்ருர் ஒருவர்.

எனக்கு முதலில் புரியவில்லை.

ஜோக்கர் சீட்டை எடுத்துக் கொடுத்தார். ஓகோ! பக்தவத்சலம் ஜோக்கர் சீட்டைப் போன்றவர் என்பதை, இவர்கள் அந்த சீட்டுக்குப் பெயராகவே கொடுத்துவிட்டார்கள். ஜோக்கர் சீட்டு எந்த மந்திரி சபையிலும் சேர்ந்துளிடும் ஒரு கோமாளியின் படம் ஆகும்.

ஜோக்கர் சீட்டு, 'கிளாவர் ஒன்பதாக உருமாறியதும் ஆட்டம் தொடர்ந்தது.

"எனது பரம்பரையினர்!"



புத்தர் கனிவுடன் கவனிக்கிருர்.

"தென்னங் கீற்றின் பொன்னணி மண்டபம்"



மாநாட்டுப் பந்தலின் இரண்டாவது வாயில்:

நேரத்தின் போக்கைத் தணிக்க, ஒருவர் பாடினர். பின் தோழர் டி. வி. என். "சந்திரமோகன்" நாடகத்தில் வரும் வசனங்களைச் சொல்லிக்கொண்டிருந்தார். வாளை உருவிப் பேசவேண்டிய நேரத்தில், ஒரு தவருன சீட்டை உருவிப் போட்டுவிட்டார்!

விழுப்புரத்தில் டீ, சோடா சாப்பிடுபவர்கள் இறங்கினர்கள். முடங்கிக்கிடந்த கால்களை நீட்டி, சிறிது நடந்தும் பார்த்தார்கள் பலர்.

மீண்டும் இரயில் தொடர்ந்ததும், பாரதிதாசன் பாட்டுக்கள், "சொர்க்கவாசல்" பாட்டுகள் "ஆண்டவனும் ஆகாசமதில்" என்ற பாட்டுகள் தொடர்ந்து வந்தன. எங்களைப் போன்று ஏதாவது மாநில மாநாட்டுக்குப் போகும் வேலை இல்லாதிருந்தால், ஆண்டவன் அந்த நேரத்தில் உறங்கிக்கொண்டுதான் இருப்பார். ஆனல் அவருக்கு என்ன நெருக்கடியோ? எந்த மாநாடு கூட்டுகிருரோ யார் கண்டது?

அரியலூருக்குப்பின் இரயில் நின்ற அடுத்த நிலையத்தில் வாழ்த்தொலிகள் அதிகமாயிருந்தன. அது "கல்லக்குடி" நிலையம்! மும்முனைப்போராட்டத்தில் முக்கியமானதொரு இடம்! வடநாட்டு ஆதிக்கத்தை எதிர்த்துக் காணப்பட்ட களம்! தூய்மையான இரத்தம் சிந்தப்பட்ட இடம்! தடியடி, துப்பாக்கி, தண்டனை, படுகாயங்கள், இரத்தம், பிணம் இவைகளையும் மீறி, அந்த இருளையும் மீறி, "கல்லக்குடி" என்று ஒட்டப்பட்டிருந்த இருவண்ணப்பெயர் காட்சியளித்தது!

லால்குடி நிலையத்தில், மாலைகளுடன் வாழ்த்தொலிகளுடன் பலர் காத்திருந்தார்கள்.

நிற்க வேண்டிய நிலையங்கள் வந்தால், "திராவிட நாடு திராவிடருக்கே" "அண்ணா வாழ்க!" என்று வாழத்தொலிகள் ஒவ்வொரு வண்டியிலிருந்தும் கிளம்பும். ஆனால் லால்குடி நிலையத்தில் வாழ்த்தொலிகள் அதிகமாக இருந்தன. நிலையத்தில் கூட்டம் அதிகமென்பதுடன், ஒவ்வொரு வண்டியிலிருந்தும் தோழர்கள் கீழே குதித்து, மாலைகளை எடுத்துக்கொண்டு ஓடினார்கள். கூட்டம் கீழிறங்கிப் பார்த்தது. மாநாட்டுத் திறப்பாளர் தோழர் ஜி. பி. சோமசுந்தரம், பொதுச்செயலாளர்—மாநாட்டுத் தலைவர் தோழர் நெடுஞ்செழியன், உதவிப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன் அங்கு இரயிலில் ஏறினார்கள். அதனால் தான் கூட்டம்!

இருள் கலையத்தொடங்கியது. நட்சத்திரங்கள் மங்கின. ஒளி பரவத்தொடங்கியது. வைகறை எழுந்தது.

"வாழ்க வாழ்கவே, வளமார் எமது திராவிடநாடு வாழ்க வாழ்கவே! சூழும் தென் கடல் ஆடுங்குமரி..." இரண்டு வண்டிகளுக்கு முன்னால் ஒரு தோழர் இனிய குரலில் பாடினார். காலை நேரத்தில், இருள் கரையும் பொழுதில், குளிர்ந்த காற்று மெதுவாக அடிக்க, நாம் சேரவேண்டிய இடத்திற்கு அருகில் வந்துவிட்டோம் என்று மலர்ச்சியுடனிருக்கும்பொழுது, காற்றில் கலந்து வந்தது அந்த கீதம்! செவியகம் நிறைந்தது, நெஞ்சு குளிர்ந்தது, சிந்தை களித்தது! வண்டிகளில் கொடிகள் மீண்டும் தலைநீட்டத் தொடங்கின. நீண்ட துடுப்புகள்போன்று இருபக்கத்திலும் கொடிகள் ஆடிவர, விரைவாகச்செல்லும் படகைப்போன்று அந்த

"ஒடிந்தன விலங்குகள்"

பந்தலின் முகப்பில் தீட்டப்பட்டிருந்த ஓவியம்.

"புறப்பட்டுவிட்டது......"

ஊர்வலத்தின் ஆரம்பம்.

இரயில் சென்றது. ஆனால் இவற்றையெல்லாம்விட நீண்டதொரு கொடியை விரிப்பது போன்று கிழக்கில் கருமேகத்தின்கீழ் செவ்வொளி படர்ந்திருந்தது!

இரண்டு ஊர்கள் கடந்ததும், இரயில் திடீரென்று நின்றுவிட்டது. அந்த ஊரில் இரயில் நிற்காமல் கடந்துபோவது வழக்கம். நிலையத்தில் நிற்காமல், கைகாட்டி மரத்திற்கப்பால் வந்து நின்றுவிட்டது. என்ன கோளாறு என்று தோழர்கள் இறங்கிப்பார்த்தார்கள். ஒன்றுமில்லை. இஞ்சினில் இருப்பவர்கள் சாவிவளையத்தை வாங்கத்தவறிவிட்டார்கள். நிலையத்திலிருப்பவன் வளையத்தைத் தூக்கிக்கொண்டு ஓடிவந்தான். பின் இரயில் நகர்ந்தது.

தென்னையும், கமுகும், வாழையும் அடர்ந்து விளங்கும் திருவரங்கம் வந்தது. அந்த ஊரில் பகவான் நீங்காது பள்ளிகொண்டிருந்தால்கூட, ஊர்மக்கள் எழுந்து நடமாடிக்கொண்டிருந்தார்கள். மாலைகளும் கொடிகளும் இரயில்வே நிலையத்திற்குள் நிறைந்திருந்தன.

மணல் பரந்து, ஓரத்தில்மட்டும் சிறிதளவு நீரோட்டத்துடன் காணப்பட்ட காவிரியாற்றை இரயில் மிகுந்த கூச்சலுடன் கடந்தது. ஆற்றைக் கடந்து வரும்பொழுது, தூரத்தில் ஒருகொடியைப் பிடித்துக்கொண்டு ஐம்பது அறுபது தோழர்கள் ஆற்று மணலில் திருச்சி நோக்கிப் போய்க்கொண்டிருந்தார்கள். காட்சி எத்தகையது! மணற் பரப்பு, கண்ணுக்கெட்டியதூரம்வரை வேறு நடமாட்டம் கிடையாது! பாலைவனத்தில் மத்தியில் ஊர்ந்து செல்லும் ஒட்டகப் பாதை



"இரண்டு மைல்களுக்கப்பால்..."

ஊர்வலத்தின் கடைசிப்பகுதி:

யைப்போல், அந்தக் கூட்டத்தினர் வரிசையாகப் போனார்கள்! முன்னிருந்த தோழரின் கரத்திலிருந்த கொடி அசைந்துகொண்டிருந்தது! எந்த ஊர்த்தோழர்கள், எந்தவட்டக் கழகத்தைச் சார்ந்தவர்கள். எனக்குத் தெரியாது! இருந்தாலும் அந்தக் காட்சி—சிறிது நேரத்திற்குள் என் கண்களிலிருந்து மறைக்கப்பட்டது என்றாலும், என் நினைவைவிட்டு அகலவில்லை.

பாலைவனத்தின் கடுமையைப் பாராது, வளம்தேடிப் பயணம் தொடர்கிறது! ஆனால் அதன் அருமை பெருமைகளை உணராமல் எதிர்நின்று குரைப்பவர்களும் உண்டு, ஆனால் அதனால், பயணம் தடைப்படுவதில்லை!

கடைசியாகத் திருச்சி சந்திப்பு! வரவேற்புக் கழகத்தினர் சந்தித்தனர். மாநாட்டுத் தலைவர் திறப்பாளர், உதவிப் பொதுச்செயலாளர் முதலியவர்களுக்கு மாவட்டக் கழகங்கள் மாலையிட்டு அழைத்துச் சென்றன. கூட்டம் குறைபட்டுமென சிறிதுநேரம் காத்திருந்து, பின் நாங்கள் வெளிவந்தோம்.

காலைச் சிற்றுண்டி அருந்திவிட்டு, முதலில் வள்ளுவர் நகருக்கு நாங்கள் சென்றோம். வள்ளுவர் நகர் அமைக்கப்பட்ட பந்தயத் திடல் அதற்குமுன் முள்ளும் புதர்களும் நிரம்பிய காட்டுவெளியாகக்கிடந்தது. பிரதமர் நேரு திருச்சிக்கு வந்தபொழுது, அந்த இடத்தில் பொதுக்கூட்டம் போடலாமென நிச்சயித்து, சென்னை அரசாங்கம் அதற்காக நாற்பதினாயிரம் ரூபாய் செலவில் அந்த இடத்தைத் திருத்தி அமைக்க நினைத்தது. சில ஆயிரத்துக்குமேல் செலவிட்டு, சிறு பகுதி அளவு நிலத்தைச் சமன்செய்து, பின்

"இது நம்மால் ஆகாதகாரியம்!" என்று அந்த இடத்தைவிட்டு வேறு இடம் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். பணிபுரிய பெரும் அமைப்பையும், வசதிகளையும் பெற்ற மாநில அரசாங்கமே கைவிட்ட இடத்தைத்தான், கழகம் தனது மாநில மாநாட்டின் இடமாகத்தேர்ந்தெடுத்து, அதைத்திருத்திச் செப்பனிட்டு, மக்கள் நடமாடும் இடமாக்கி, மாநாடு கூடும் வகையில் செய்தது. இதில்பந்தலமைப்போர் ஆற்றியபணி போற்றுதற்குரியது. முட்செடிகளை அகற்றி, தரையைச் சமன்செய்து, இடத்தைப்போதுமான அளவு திருத்துவதற்குள் போதுமென்றாகிவிட்டதாம். இதற்கிடையே பாம்புகள், பெரிய நண்டுவர்க்கிளிகள், ஜலமண்டலங்கள் விதவிதமான நச்சுப்பூச்சிகள் அந்த இடத்திலிருந்து அகற்றப்படவேண்டியதாயின. பந்தலை அமைப்பதில் வரவேற்புக் குழுவுக்கும் அண்ணா அவர்களுக்கும் உறுதுணையாக இருந்தவர்கள் தோழர்கள் சாம்பு, வானமாமலை ஆவார்கள். 16ந் தேதி காலையில் உள்நுழைந்தபொழுது வேலைகள் பூர்த்தியடையாத நிலையிலிருந்தன. முதலில் வைக்கப்பட்ட அலங்கார வாயிலில் மின்சார வேலைகள் நடைபெற்றுக்கொண்டிருந்தன. அதற்கடுத்த இரண்டாவது வாயிலில் கீற்றுப் பின்னப்பட்ட முகப்பு—கடைசி வேலைகளை முடித்துக்கொண்டிருந்தார்கள். சுற்றிலும் அடைப்புவேலை துரிதமாக நடைபெற்றுக்கொண்டிருந்தது. பந்தலுக்குள் மேடை தயாராகவில்லை. அதையடுத்து நாடகமேடையில் முதல் வேலைகள் துவக்கப்படும் நிலை. நாடகம் நடத்துவதற்

"இருளில் ஒளி"

கருத்த வானின் பின்னணியில் கழகத்தின் ஒளிசேர் மாநாடு.

“ஒளிவரிசை”



இரண்டாவது வாயிலிலிருந்து பந்தலின் இரவுக்காட்சி.

கான திறந்த வெளி அரங்கம் “திறந்த வெளியாக” ஆங்காங்கு திறந்துவிடப்பட்ட பல வழிகளையுடையதாய்க் கிடந்தது. இவை 16ந் தேதி காலையில் இருந்தநிலை! ஆனால் மறுநாள் காலைக்குள் இவையெல்லாம் மாறி, திருத்தமான நிலை ஏற்பட்டது, பொறுப் பேற்றவர்களின் சலியாத உழைப்பால்!

பந்தலின் அமைப்பில் ஒரு புதுமுறை காணப்பட்டிருந்தது. மாநாட்டுப் பந்தலில் அமைக்கப்பட்ட மேடை நீட்டப்பட்டு, பின் புறத்தில் நாடகமேடையாக ஆகியது. அதற் கப்புறம் திறந்த வெளி அரங்கம் வகுக்கப் பட்டிருந்தது. இதனால் நாடகத்திற்குத்தனி யாகப் பெரிய இடம் கிடைத்ததுடன், பல கம்பங்கள் மறைப்பதால் ஏற்படும் இடர்ப் பாடும் தவிர்க்கப்பட்டது.

மாநாட்டு திறந்த வெளி அரங்கத்தைத் தாண்டி, இரண்டு பர்லாங்கு தூரத்தில் தலைமை நிலையம் அமைக்கப்பட்டிருந்தது. அது காலஞ்சென்ற கலிபுல்லா அவர்களின் பங்களாவாக இருந்ததாம். அதைநோக்கி அடிக்கடி கார்களும், கால்களும் போனதால் புதிய பாதை அமைக்கப்பட்டிருந்தது. அதன் வழியாகத் தலைமை நிலையத்திற்கு நான்போய்ச் சேர்ந்தேன். அங்கு போனதும் முதலில் கேட்டகுரல் போளூர் சுப்பிரமணியத்தினுடை யது. தலைமை நிலையக்கட்டிடத்தின் பொறுப் புகளை அவர் செய்துவந்தார். மாடியில் தோழர் சம்பத் ஒரு கத்தியுடன்—பயப்பட வேண்டாம், சவரம் செய்யும் கத்தியுடன் இருந்தார், தன் முகத்தைச் செம்மைப் படுத்திய வண்ணம்! முதல் அறையில் தோழர்கள் மதியழகன், வில்லாளன், அரங் கண்ணல், முதலியவர்கள் அமர்ந்திருந் தார்கள். இரண்டாவது அறையில் தோழர் கள் நெடுஞ்செழியன், நடராசன், ஜி. பி. சோம சுந்தரம், ஏ. கோவிந்தசாமி, அறிவழகன் முதலியவர்கள் இருந்தார்கள். இவர்களை யெல்லாம் தாண்டி அண்ணா அவர்கள் அறி துயிலில் இருந்தார்! உலகங்களையெல்லாம் ஆடவிட்டு, பரந்தாமன்மட்டும் ஆடாமல் அசையாமல் பள்ளிகொண்டிருப்பாராம்! அப் படி அறிஞர் அண்ணா இருக்கிறாரோ என்று நினைக்கத்தோன்றும். ஆனால் அது தவறு.

“பொதுக்குழுவுக்குப் போகவேண்டும் நாழி யாகிவிட்டது!”

“கார் வந்துவிட்டது. சீக்கிரம்!”

“வாருங்கள் போகலாம்!” தோழர்கள் ஏ. கோவிந்தசாமி, ஜி. பி. சோமசுந்தரம், நெடுஞ்செழியன் வெளியில் வந்தார்கள்.

“அண்ணாவை எழுப்பலாமா?”

தோழர் நடராசன் தடுத்தார். “காலை ஆறு மணிக்குத்தான் அண்ணா படுக்கப்போனார். அங்குபோய் தயாரானதும், போளூருக்கு போன் செய்யலாம்!”

காலை ஆறுமணிக்குத்தான் படுக்கச் சென் றார்! முதல்நாள் இரவு பூராவும் மாநாட்டு பந்தல் வேலைகளைப் பார்ப்பதற்காக, அண்ணா அவர்கள் கண்விழித்திருக்கிறார்! தோழ

“மும்மணிக்கோவை”



தலைவர், வரவேற்பாளர், திறப்பாளர்.

(இதன் தொடர்ச்சி 27-ம் பக்கம் பார்க்க)



# அண்டசராசரம்



(44)

நாரதருக்குப் பர்வதன் என்று ஒரு மரு கன்—தங்கையின் மகன் இருந்தானும். இரு வரும் ஒருசமயம் பிரமலோகத்தை விட்டுக் கிளம்பி, பூலோகத்தைச் சுற்றிப்பார்க்க வந்தார்கள். வேடிக்கைபார்த்து வரும்போது, ஒருவர் மனதில் உள்ளதை மற்றவரிடம் மறைக்காமல் சொல்லிவிட வேண்டுமென்று இருவரும் உடன்பாடு செய்துகொண்டனர். உலவம் வந்தவர்கள், சஞ்சயம் என்ற நாட்டுக்கு வந்து, அந்நாட்டு அரசனைக் கண்டார்கள். முனிவர்களாகத் தோற்றமளிக்கும் இருவரை யும் சஞ்சயநாட்டுஅரசன் வரவேற்று உப சரித்து, தனது ‘நந்தவனத்தின் மத்தி யில் அமைக்கப்பட்ட மாளிகையில் தங்கச்செய் தான். அவர்களுக்குப் பணிப்பெண்கள் பலர் பணிவிடைகள் செய்தனர்.

அரசனுக்கு தமயந்தி என்ற பெண் இருந் தாள். அந்தப்புரத்தை விட்டு மாலைவேளை யில் அவள் நந்தவனத்தில் உலவிக் கொண் டிருப்பது வழக்கம். அப்படி உலவிக்கொண் டிருக்கும்பொழுது ஒருநாள், நாரதர் அவளைப் பார்த்துவிட்டார். நாரதர் முனிவரென்றாலும் அழகானபெண்ணைப் பார்த்ததும், அவர் உள் ளத்தில் ஆசைமூண்டது. பிறகு மாலை, இரவு, ஓய்வு நேரங்களில் தோட்டத்தில் நல்லதொரு இடத்தில் சார்ந்து நாரதர் தனது வீணையை மீட்டிப் பாடிக் கொண்டிருப்பார். இனிய கானம் வருவது கேட்டு, இளவரசி தோட்டத் துக்குள் வருவாள். நாரதரின் கானம் காந்த மென இழுத்தது. தோட்டத்தைச் சுற்றிவந்து, தனிமையில் அமர்ந்திருக்கும் நாரதரின்முன் அவள் உட்கார்ந்து, இசையைக்கேட்டு ரசித்த படி இருந்தாள், கைவீணை நரம்புகளைத் தடவ கண்கள் எதிரிலிருக்கும் அழகை இரசித்தபடி நாரதர் இருந்தார்.

ஓய்வு நேரங்களிலெல்லாம் இசை கேட்பதற் காகத்தமயந்திவருவாள். அவளுக்காகத்தோட் டத்தில் காத்திருக்கும் நாரதர், வீணை மீட்டு வார். சிறுகச் சிறுக, அவளை அருகே அமர வைத்து, அவளுக்கு வீணை வாசிக்கக்கற்றுக் கொடுத்தார். வீணை கற்றுக்கொள்வதென் றால் சாமான்யமா? அவளுடைய கைவிரல் களை, கைகளை இப்படி அப்படி யென்று பிடித்து வைத்து, நாரதர் கற்றுத்தந்தார் வேடிக்கை, விளையாட்டுகள் தொடர்ந்தன.

நாரதரின் போக்கு அவருடன் வந்த பர்வத னுக்குப் புரியவில்லை, புரிந்ததும் பிடிக்கவில்லை. மாலை நேரங்களில் தனியே போய்விடுவதும், நீண்ட நேரம் இளவரசியுடன் தனியாக அமர்ந்து கொள்வது! பூலோகம் சுற்றிப் பார்க்க வந்த முனிவருக்கு இந்த வேலைகள் ஏன் என்று பர்வதனுக்குப்பட்டது. இள வரசி தமயந்தியும் நாரதரென்றால், மிகவும் பணிவுடன், குதூகலத்துடன் உபசரித்தாள். பர்வதமுனிவர் வந்தால், அவள் தன் தோழி களைப் பணிவிடைசெய்யச் சொல்லிவிட்டுப் போய்விடுவாள். பர்வதமுனிக்குக் கோபம் வந்தது.

வழக்கம்போல் மாலைவேலை முடிந்து திரும் பிய நாரதரைப் பார்த்து, “எங்கு போயிருந்தீர் கள்?” என்று பர்வதமுனி கேட்டார். நாரதர் பதில் சொல்லாமல் இருந்தார்.

“இளவரசியுடன் அவ்வளவு நேரம் என்ன பேச்சு?”

நாரதர் அதற்கும் பதில் சொல்லவில்லை.

பர்வத முனிக்குக் கோபம் வந்தது. பூலோகம் சுற்றிப்பார்க்க இருவரும் கிளம்பிய பொழுது செய்துகொண்ட ஒப்பந்தப்படி, தம் மனதிலுள்ளதை ஒளிக்காமல் ஒருவர் மற்றவருக்குச் சொல்லிவிட வேண்டுமென்பதாகும். அந்த வாக்குறுதியை மீறிய காரணத்தால், "நீ குரங்கு முகமாகுக!" என்று பருவதர் சபித்தார்.

சிறு குற்றத்துக்காகத் தன்னைச் சபித்தமைக்காக, நாரதர் திருப்பி "நீ சொர்க்க லோகம் போகமுடியாமல் அவதிப்படுக!" என்று சாபமிட்டார்.

பருவதர் அந்த இடத்தைவிட்டு அகன்றார். குரங்குமுகமான நாரதர் பகக்த்துக்காட்டுக்குள் சென்றார்.

சஞ்சய நாட்டு அரசன் மறுநாள் காலை பார்த்தபொழுது, தனது விருந்தினராகத் தங்கியிருந்த இரண்டு முனிவர்களையும் காணேம். பக்கத்தில் தேடியும் அவர்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை. நாரதரின் வீணை ஒசை நின்றது. அவரைப்பார்க்காமல், இளவரசிக்குப்பொழுது போகவில்லை.

வாட்டத்துடனிருக்கும் இளவரசிக்குத் திருமணம் முடிக்கவேண்டுமென்று, அரசர் ஏற்பாடுகளைச்செய்தார், சுயம்வரத்தையும்கூடச் செய்தார். ஆனல் தமயந்தி எதற்கும் ஒத்துக்கொள்ளாமல், "நாரத முனிவரைத்தான் மணஞ்செய்து கொள்வேன்" என்று கண்டிப்பாகச்சொல்லிவிட்டாள். பின் முனிவரைத் தேடும்வேலையில் அரண்மனைக்காவல்காரர்கள் ஈடுபட்டார்கள். கடைசியாக, காட்டில் வீணை வாசிக்கப்படும் இசைகேட்டு, அங்குசெல்ல, குரங்கு முகத்துடன் நாரதர் இருப்பதைப் பார்த்து, அவரை அழைத்துவந்தார்கள். திருமணமும் நடைபெற்றது. குரங்குமுக மாப்பிள்ளைக்குக் குமரி தமயந்தி மாலையிட்டாள், மணந்தாள்.

நாரதரிட்ட சாபத்தால், மேலுலகம் போக முடியாமல் அவதிப்பட்ட பருவத முனிவர் மீண்டும் அங்குவந்தார். இளவரசியையும், அவளுக்குக் கிடைத்த குரங்குமுகக் கணவனையும் கண்டு இரக்கப்பட்டு, குரங்குமுகம் போகுமாறு சாபத்தைத்திரும்ப வாங்கினர். நாரதர் முன்பிருந்த முகத்துடன்,—குரங்கு முகத்தைவிடச் சற்று அழகிய முகத்துடன், காட்சியளித்தார். சொர்க்கலோகம் போவதற்கு விதிக்கப்பட்டிருந்த தடையை நாரதர் நீக்கினர். நாரதமுனி பலகாலம் தமந்தியுடன் ஈடுபட்டிருந்தார்.

பெண்களையடைய, நாரதமுனிவரும் பருவத முனிவரும் போட்டி போட்டது மற்றெரு கதையிலும்—புராணத்திலும் வருகிறது. அம்பரீசன் என்ற அரசனுக்குச் சிரீமதி என்ற பெண் இருந்தாள். பூலோக யாத்திரையில் கிளம்பிய இரண்டு முனிவர்களும் அம்பரீசன் அரண்மனைக்கு வந்தபொழுது அழகான பெண்ணைக் கண்டார்கள். அவ்வளவுதான்! முற்றுந்துறந்த இரண்டு முனிவர்களுக்கும் மோகம் தலைக்கேறியது. தனித்தனியாக அரசனிடம் போய் கேட்டார்கள். யாரை மறுத்தாலும், கடுமையான சாபம் கிடைத்துவிடுமென்ற பயம் அவனுக்கிருந்தது. ஆதலால் நாரத முனிவர் கேட்டபொழுது, "பருவத முனிவரும் கேட்கிறார்" என்றும், பருவத முனிவர் கேட்டபொழுது "நாரத முனிவரும் கேட்கிறார்!" என்றும் அரசன் சொல்லிவந்தார். கடைசியாக இருவரும் ஒன்றுக வந்தபொழுது, "சிரீமதி யாருக்கு மாலையிடுகிறாளோ அவருக்கு மகளைத் தந்துவிட அட்டியில்லை" என்று கூறினன்.

அதிரூபசுந்தரர்களாக அவர்கள் தோற்றமளிக்காவிட்டாலும், இளவரசியை அடைய வேண்டும் என்ற மோகம்மட்டும் அவர்களை விடவில்லை. முனிவர்கள், சடாமுடிதாரிகள் அகோரப் பார்வையினர். ஆனல் ஆசை முன் தள்ளியது, 'அழகு சுந்தரியை அடைய வேண்டுமென்று காமம் கனலாகத் தாக்கியது. இதற்கிடையில் இருவருக்குள்ளும் போட்டி! பருவத முனிவர் ஒரு திட்டமிட்டார், இளவரசி மாலையைக் கொண்டுவந்து பார்க்கும் பொழுது நாரதர் குரங்கு முகமாகக் காட்சியளிக்க வேண்டும் என்று சாபமிட்டிருந்தார். நாரதருக்கு இது தெரியாது, ஆனல் நாரதர் ஒரு திட்டமிட்டு, சிரீமதி மணமாலைகொண்டு வரும்பொழுது பருவத முனிவர் குரங்குமுகமாகக் காட்சியளிக்க வேண்டுமென்று மனதிற்குள் சாபமிட்டிருந்தார். ஒருவரிட்ட சாபம் மற்றவருக்குத் தெரியாது.

மறுநாள் அரசவையில், இரண்டு முனிவர்களும்போய் நின்றார்கள். சிரீமதி மணமாலையுடன் வந்தாள். பருவதர் மெதுவாக நாரதரைப்பார்த்தார். நாரதர் குரங்குமுகத்துடனிருந்தார். தமது திட்டம் பலித்துவிட்டதென்று பருவதர் மகிழ்ந்தார். நாரதர் மெதுவாகப்பார்த்தார். பருவதமுனி குரங்கு முகத்துடன் இருந்தார். தமது சாபம் பலித்துவிட்டதென நாரதமுனி மகிழ்ந்தார். இருவரும் குரங்குமுகத்துடன் இருந்தார்கள்.



"ஐயோ! குரங்குகள்!" என்று இளவரசி கூச்சலிட்டாள்.

அந்தநேரத்தில் இரண்டு குரங்குகளுக்குமிடையில், விட்டுணு தோன்றினர். அவர் எப்படி வந்தாரென்றல், பூலோகத்தில் அழகான பெண்ணெருத்தி இருக்கிறளென்பதும், அவளையடைய இரண்டு முனிவர்கள் போட்டியிடுகிறர்கள் என்பதும் மகாவிட்டுணுவுக்குத் தெரிந்தது. அவள் தனக்கேற்ற பெண் என்று விட்டுணு தீர்மானித்து, தக்கசமயம் வரவேண்டுமென்று காத்திருந்தார். குரங்கு முகத்தினராக முனிவர்கள் நின்றபொழுது, இருவருக்குமிடையில் மகாவிட்டுணு அதிக ரூபலாவண்யத்துடன் தோன்றி, தெய்வீகப் புன்னகை செய்தார். சிரீமதி அவர் கழுத்தில் மாலையைப்போட்டாள். சிரீமதியை விட்டுணு மணந்துகொண்டார். இவ்வளவு நாட்களும் காத்திருந்த நாரதரும், பருவதரும் கோபித்து அம்பரீசனிடம் கோபங்கொண்டு சண்டை போடத் தொடங்கினர்கள். விட்டுணுவின் சக்கரம் அரசனுக்குத்துணைவர, இரண்டு முனிவர்களும் அடங்கிவிட்டார்கள்.

நாரதமுனிவருக்குப் பெண்களிடம் மட்டு மல்ல, அழகான ஆண்களைப் பார்த்தாலும் மோகம் வந்துவிடுமாம். ஒருசமயம், மகாவிட்டுணுவைப் பார்த்தபொழுது மையல்கொள்ள, அவர் கண்ணனகப் பிறந்ததும் உன்குறை தீர்ப்போமென்று சொல்ல, நாரதர் கோபிகையாக உருமாறி கண்ணனிருக்குமிடம் வந்தாள். கண்ணன்தான் கோபியர் கொஞ்சும் ரமணனக இருந்தானே! நாரதமுனிவர் கோபிகையாக வந்து, கொஞ்சிக் குலவிட அழைக்க மறுக்காமல் அருள்புரிந்தான. பலன் குழந்தைகள் பிறந்தன. ஒன்று இரண்டல்ல, அறுபது பிள்ளைகள் பிறந்தன, கோபாலனும் கோபிகைக்குமிடையில் நடந்த காமசேட்டைகள் காரணமாக! பின் ஆசைதீர்ந்த நாரதர் பழைய உருவத்துடன் மேலுலகம் சென்றார்.

நாரதர் பெண்ணக உருமாறி பிள்ளைப்பேறு பெற்றது மற்றெரு புராணக் கதையிலும் வருகிறது. ஒருசமயம் திருமாலைத் தரிசிக்க, நாரதர் சென்றிருந்தார். அப்பொழுது திருமால் அந்தப்புரத்தில் இலட்சுமிதேவியுடன் ஏகாந்தமாய் சல்லாபித்துக்கொண்டிருந்தார். அந்தச் சங்கடநேரத்தில், நாரதர் திடும் பிரவேசமாய் உள்வந்தார்! அலங்கோலமாயிருந்த நிலை! இலட்சுமி ஆடைகளைப் போர்த்துக்கொண்டு ஒடி மறைந்துவிட்டாள்.

தன்னைக்கண்டு அவர்கள் நாணி மறைவது கண்டு நாரதருக்குக் கோபம் வந்தது. "நான் முற்றுந்துறந்த முனிவன், மாயையைவென்றவன், அப்படியிருக்க, இலட்சுமி என்னைப் பார்த்து ஏன் மறையவேண்டும்?' என்று திருமாலை நோக்கி அவர் கேட்டார்.

"மாயை உன்னை இன்னும் விடவில்லை!" என்று திருமால் அறிவித்தார்.

நாரதர் அதை மறுக்க, உன்னிடம் குடிகொண்டிருக்கு மாயையை, மனதில் அடங்கியிருக்கும் நிராசைகளைக் காட்டுகிறேன், வா! என்று நாரதரைத் திருமால் அழைத்துக் கொண்டு, பூலோகத்துக்கு வந்தார். அங்கு ஒரு காட்டில் இருந்த குளத்தைக்காட்டி "இதில் அமிழ்ந்து நீராடிவா!" என்று திருமால் கட்டளையிட்டார். தன்னுடைய வீணையைக் கரையில் வைத்துவிட்டு, நீரினுள் இறங்கினர். மூழ்கி எழும்பொழுது, அழகிய பெண்ணக அவர் ஆகிவிட்டார். கரையில் இருந்த வீணையை எடுத்துக்கொண்டு, திருமால் மறைந்தார்.

பெண்ணுருவான நாரதர் காட்டில் உலவி வந்தார். அப்பொழுது காட்டில் வேட்டையாடவந்த ஒரு அரசன் பெண்மானைத்துரத்தி வந்து, இந்த பெண்மானைக்கண்டு நின்றன் காதல் கொண்டான். நாரதப்பெண்ணும் அவனை மறுக்கவில்லை, அவன் இச்சைக்குக் கட்டுப்பட்டாள். அரசன் அவளை அழைத்துக்கொண்டுபோய் தன் பட்டத்தரசியாக ஆக்கிக்கொண்டான். நாரதராகிய பெண்ணும் அரண்மனையிலும் அந்தப்புரவாழ்விலும் மயங்கிக்கிடந்தாள். பல பிள்ளைகள் பிறந்தனர். முன்னைய நிலைகூட அவளுக்கு மறந்துவிட்டது. அந்த நிலைமையில், வேற்று நாட்டு அரசன் வந்து சண்டையிட்டு, அரசனையும் குமாரர்களையும்கொன்று குவித்தான். கணவனையும் மக்களையும் இழந்த அரசி அழுது புலம்பினள். அப்பொழுது திருமால் அவள் முன் தோன்றி, முன்பு நீராடிய குளத்துக்கு அழைத்துச்சென்றார். அதில் மூழ்கி எழுந்தபொழுது நாரதர் பழைய உருவத்துடன் வெளிவந்தார். திருமால் வீணையை அவரிடம் தந்து, "மாயை படுத்தும்பாட்டைப் பார்!" என்று சொல்லி மறைந்தார். நாரதர் திரிலோக சஞ்சாரராய் பின் சுற்றினர்.

நாராயணனின் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு நாரதர் சுற்றிக்கொண்டிருப்பார். கலகப் பிரியராகவும், கலகம் செய்யாது ஒரு நாளிருந்தால் தலைவெடித்துப் போகுமென்ற சாபமும் பெற்றவராகவும் நாரதர் இருந்தார். நாரதர் வராத புராணக் கதைகள் இருக்காதெனவே கூறலாம். திரிலோக சஞ்சாரி!

வம்புகளைப்பரப்பி, சண்டைகளை மூட்டி விடுவதில் நிபுணர்! பிரமாவின் புத்திரர், விட்டுணுவுக்கு வேண்டியவர்! எனவே ஆபத்தின்றி அவர் சுற்றி வந்தார்! நாராயண மந்திரத்தை அவர் எல்லோருக்கும் உபதேசித்துக்கொண்டிருந்தார். பிரகலாதன் போன்றவர்கள் கருவிலிருக்கும்பொழுதே, தாயின் கருப்பைக்குள் நாரதர் புகுந்து, நாராயண மந்திரத்தை உபதேசித்தார். கருவிலிருக்கும் சிசு நாராயண மந்திரத்தைக் கற்றுக்கொண்டதும், நாரதர் கருப்பையைவிட்டு வெளியேறினர்.

கலகப்பிரியரென்றும், வேத மார்க்கத்திலிருந்து நீங்கி எதுவும் தவறுகள் நிகழா வண்ணம் நாரதர் கவனித்து வந்தார். இராமயணத்தில் தவஞ்செய்த சூத்திரனை சம்புகனின் தலை கொய்யப்படுவதற்கு முக்கிய காரணமாக இருந்தவர் நாரதர். இராமனுடைய ஆட்சியில் பிராமணப் பிள்ளை இறந்துவிட்டதும், குழந்தை இறந்துவிட்டது என்று பிராமணர்கள் இராமரிடம் முறையிட்டபொழுது, நாரதர் அங்கு வந்து, “காட்டில் சம்புகன் என்ற சூத்திரன் குலதர்மத்தை விட்டு, பிராமணர்கள் செய்யவேண்டிய தவத்தைச் செய்துகொண்டிருக்கிறன். இது வேதங்களில் சொல்லப்படும் குலதர்மத்துக்கு விரோதமானது. அந்த அதர்மனின் அடாத செயலால்தான் அயோத்தி நகரில் ஒருபிராமணக்குழந்தை இறந்துவிட்டது. இராமா! இந்த அநீதியை நீ அகற்றவேண்டும்!” என்று உபதேசித்தார். நாரதர் சொல்லியபடி இராமர் காடு சென்று, அங்கு தவஞ்செய்து கொண்டிருந்த சம்புகனின் தலையைக் கொய்து, தர்மத்தை நிலைநாட்டினராம்.

## அமெரிக்காவில் பிரம்மா!

சந்திரமண்டலத்திற்குப்போக விரும்புகிறீர்களா? பயங்கர முதலைகள் வாழும் அமேசான் காட்டாற்றைக் கடக்க வேண்டுமா? வால்ட் டிஸ்னே, உங்களை அழைத்துச்செல்ல காத்திருக்கிருர்—இங்கல்ல, அமெரிக்காவில். உலகில் பல கார்ட்டூன் சித்திரத்தைப் புகுத்தி அதன்மூலம் சிறந்த வெற்றிகண்ட ஓவியவிற்பன்னர் வால்ட் டிஸ்னே!

ஹாலிவுட் நகரத்திற்குக் கிழக்கே எட்டுமைல் தொலைவில் நூற்றிஅறுபது ஏக்கர் நிலப்பரப்புள்ள இடத்தில் ஒரு தனி உலகத்தையே உற்பத்திசெய்திருக்கிருர் டிஸ்னே. இதைப்போன்ற பல உலகங்களை, பல்வேறு இடங்களில் சிருஷ்டிக்கத் திட்டம் தீட்டியிருக்கிருர் அந்த அறிஞர். பிளாக்பூல், பிரைட்டன் போன்ற வேறு பலபகுதிகளிலும் டிஸ்னேநாடுகள் உருவாக்கப்படும் என்றுதெரியவருகிறது.

டிஸ்னேயின் அந்த உலகில் வைரச்சுரங்கங்கள் உண்டாம். ஆனல் அங்கு தொழிலாளிகளின் கண்ணீரும், முதலாளிகளின் கண்டிப்பும் கிடையாதாம். அந்த வைரச் சுரங்கத்தில் வேலைபார்க்கும் எழு குள்ளர்கள் பாடிக்கொண்டே வேலை செய்கிருர்களாம். பேய், பிசாசு என்று நம்பி மனம் மருண்டு மிரளும் அப்பாவி மனிதர்களைப்பயமுறுத்த அந்த உலகில் ஒரு சூனியக்காரிகூட இருக்கிருளாம்!

ராக்கெட்டில் அமர்ந்து மண்ணிலிருந்து கிளம்பி விண்ணேக்கிப்போக வசதிகள் உண்டாம்! ராக்கட்டில் உயரப்பறக்கும்பொழுது சிறிது சிறிதாக மறைந்து மண்ணிலுள்ள பொருள்கள் எல்லாம் வெறும் புள்ளிகளாகத்தெரிந்து கடைசியில் அதுவும் இல்லாமல் வெற்றிடமாகக் காட்சியளிக்கிறதாம்! சந்திர மண்டலத்தை நெருங்க நெருங்க எழும்பும் புகையும், ஒலியும் மயிர்கூச்செறியும்படி இருக்கிறதாம்!

‘நாளைய உலகம்’ என்ற பகுதியில் அணு விஞ்ஞானம், மருத்துவம் இவற்றின் அதிசயிக்கத்தக்க சாதனைகள் பலவும் படம்பிடித்துக்காட்டப்பட்டிருக்கின்றனவாம்.

இது தவிர, பழங்கால பாணியில் மரக்கலமும், எழுபது அடி உயரத்தில் அமைக்கப்பட்டிருக்கும் ‘தூங்கும் அழகி’ என்ற அரண்மனையும், சிறுவர்களுக்காக அமைக்கப்பட்ட ‘கப்பா’ என்ற சுழல் ராட்டினமும் அழகாக இருக்கிறதாம்! இருபத்தி எட்டு அடி உயரத்தில் கட்டப்பட்ட சுற்றுச் சுவர்களுக்குள், 160 ஏக்கர் நிலப்பரப்பில், 4 கோடி ரூபாய் செலவில் இந்தப் புதிய உலகை அமைத்திருக்கிருர் அந்த அமெரிக்க பிரம்மா!





# முத்திரை மோதிரம்

[செல்வன்]

மாலை மணி ஐந்திருக்கும். மாலைச்சூரியனின் மஞ்சள் நிறம் சுற்றுப்புறத்திலுள்ள பொருள்களின்மீது விழுந்து பொன்மயமாக்கிக்கொண்டிருந்தன. சின்னஞ்சிறுவர்கள் ‘கிட்டிப்புல்’ ஆடிக்கொண்டு இருந்தனர் தெருக்களில். பெண்கள் இடுப்பில் குடமேந்தி ஆற்றை நோக்கிச்சென்று கொண்டிருந்தனர். வயது வந்தவர்களில் சிலர் கிராமச்சாவடியில் உட்கார்ந்துகொண்டு உரத்தகுரலில் ஊர்விவகாரங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

தலையாரி மேல்மூச்சுகீழ்மூச்சு வாங்க கையில் தடியுடன் வேகமாக ஓடிவந்தான். “ஐயா! நாட்டாமை’ஐயா! நம்ம ‘உண்டு வளர்ந்தான் கோயில்’ காப்பகிருகத்தில் யாரோ ஒருத்தி செத்துக் கெடக்கிருளாம். அர்ச்சகர் ஹரிஹரய்யர் சொல்லி யனுப்பினருங்க!” என்ருன் நாட்டாமை நல்லமணியம்பிள்ளை இந்தமாதிரி எத்தனையோ அநாதைப் பிணங்கள் செத்ததை ‘ஊர்ப்பஞ்சாயத்தில்’ பிரேத விசாரணை செய்து தற்கொலை என்ருே, எதிர்பாராத ஆபத்து என்ருே மேலதிகாரிக்கு செய்தி அனுப்பியவர். ஆகவே, நிதானமாக, “போடா! போயி, ஐயா வர்ரேன்னுருன்னு சொல்லி, ஐயரை தைர்யமாக இருக்கச்சொல்லு என்ருர், சாவடியில் கூடியிருந்த சபையை தற்காலிகமாக கலைத்துவிட்டு எழுந்தார் நாட்டாமை. ஊர்க்கணக்கப் பிள்ளைக்கும், தர்மகர்த்தா தாமோதரத்திற்கும் ஆளனுப்பி கோவிலுக்கு வரச்சொல்லிவிட்டுத் தாமும் கோயிலுக்குச் சென்ருர்.

“என்னஓய்! அர்ச்சகரே! பிணம்விழுந்து ரொம்ப நாழியாயிருக்கும் போல தோணுதே. இதெல்லாம் என்னய்யா அக்ரமம். அதுவும் ஆண்டவன் இருக்கப்பட்ட இடத்தில்” நாட்டாமையின் குரலில் கொஞ்சம் காரம் இருந்தது கண்ட அர்ச்சகர் திடுக்கிட்டார், உடம்பு உதறலெடுத்து. இமைப்பொழுதில், போலீசு, ஜெயில், கோர்ட்டு, தண்டனை இந்தக்காட்சி கணவேகத்தில் அவர்முன் காட்சியளித்தன. “ஆண்டவன் இருக்கப்பட்டஇடத்தில் என்ன இந்த அக்கிரமம் என்று மிரட்டுகிருர்கள், தன் வேலைகளைச்சரிவரச் செய்யவேண்டும் என்ற கடமை உணர்ச்சியால் அல்ல, ஆண்டவன் மீது இருக்கும் விசுவாசத்தில். அதுவும் கூட பயத்தினுல் ஏற்பட்ட விசுவாசம் அர்ச்சகர் ஒரு சிட்டிகை பொடியை நாசியில் ஏற்றிக்கொண்டு, குடுமியை உதறி முடித்துக்கொண்டே முடிவுசெய்துவிட்டார் திட்டத்தை. தொண்டையை சரிப்ப த்திக் ொண்டு ஆரம்பித்தார்.

“பிள்ளைவாள் உங்களுக்கு ஒனனும் விஷயம் தெரியாது. இறந்தது-அபச்சாரம் அபச்சாரம் - இறந்ததல்ல, முக்தி அடைந்தது வேறுயாருமல்ல, நம்ப கோயில் பகவத்கைங்கர்யத்தி லிருந்தாளேன்னே அந்தராமாயிதான். நாமும்தானிருக்கோம்! என்ன பிரயோஜனம் பாருங்க, ராமாயி பகவத் சேவைக்கே தன்னை அர்ப்பணிச்சா, இப்போ, போற கதிக்கு புண்யம் தேடிண்டு தெய்வமேன்னு நிஷ்சலனமா போய் சேர்ந்துட்டா”

“என்ன அர்ச்சகரே! உம்ம உடம்புக்கு ஏதாவது......என்னய்யா! செத்ததுயாரு, எப்படிச் செத்தான்னு கேட்டா என்னமோ, பகவத் கைங்கரியம், சேவை, போறகதி புண்யம்... அப்படி இப்படின்னு கொட்டியளக்கிறீரே” என்ருர் தர்மகர்த்தா தமோதரம்பிள்ளை. நேமநிஷ்டை பூஜை புனஸ்காரம், அபிஷேகம், ஆராதனை தற்கும்குறைவின்றி நாளுக்கொரு உற்சவமும் நடத்தி தானும் வேளைக்கொரு விரதமும் இருப்பவர் தாமோதரம்பிள்ளை. இவ்வள பாடுபட்டும், பக்தி செலுத்தியும், பகவான் கடாட்சம் இல்லை. அப்படியிருக்க, கோயில் கூட்டும் வேலைக்காரி ராமாயி, அவனுக்குப் போய் ஆண்டவன் கடாட்சம், முக்தி என்ருல் அவருக்குச் சற்று வருத்தம்தான். ஆகவேதான் அர்ச்சகரைக் கொஞ்சம் அதட்டியே கேட்டார் என்ன அளக்கிறீர் என்று.

“பிள்ளைவாள்! பகவான் ராமாயிக்கு காட்சி கொடுத்தார். அதிகாலையில். அந்தப்பெரும்

சுடரொளியில் ராமாயி ஆண்டவனுடன் ஐக்ய மாகிவிட்டாள். காலையில் நடந்ததை நான் கண்டதையும், அவனைப்பற்றியும் சாங்கோ பாங்கமாக நான் சொல்றேன் கேளுங்கோ."

கிழவி ராமாயியைப் பற்றி அர்ச்சகருக்கு அவர் தகப்பனர் சொல்லித்தெரியும். அர்ச்சகர் ஹரிஹரய்யரின் தகப்பனர் அர்ச்சகர் அகோரமய்யர். அவர்கள் பரம்பரையே அர்ச்சகத் தொழில்தான் அகோரமய்யருக்கு, ராமாயியை அவள் சிறுவீடு கட்டி சிரித்து விளையாடும் சின்னப்பருவத்திலிருந்து தெரியும். அவளைப்பற்றிக் கேள்விப்படாதவர் அந்த வட்டத்திலேயே இல்லை எனலாம்.

அனுதை விடுதிக்கு எதிராகஇருக்கும் அந்த இடிந்தவீட்டின் முன்புறம்தான் அவள்வீடு. அந்த இடிந்தவீடு சரித்திரப்புகழ்வாய்ந்ததாம். இன்னும்கூட அதன் சுவற்றில் ஏதோ எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றனவாம். அரசாங்கத்து ஆட்கள்வந்து அதையெல்லாம் சுற்றிப்பார்த்து, அந்தச் சுவற்றில் எழுதியிருக்கும் எழுத்துக்கள்பற்றி ஆராய்ச்சி நடத்தினர்களாம். அதன் விளைவாக, "சாவைக் காட்டிலும் அன்பு வன்மையுடையது" என்ற எழுத்துக்கள் அங்கே எழுதப்பட்டிருப்பதாக ஊரில் பேசிக்கொண்டார்கள். ராமாயி இந்தப் புகழ் வாய்ந்த இடத்தில் வசித்துவந்தாள். கொஞ்சம் நிலபுலன்கள் உண்டு. அவளுக்கு உற்ற நண்பர்களோ, உறவினர்களோ, ஒருவரும் இல்லை. குத்தகை வசூலிக்கவேண்டிய உதவிசெய்ய ஒரு வேலையாள் மாத்திரம் இருந்தான். அவர்களைப்பற்றி யாருக்கும்தெரியாது. உலர்ந்து சருகுபோல் இருக்கும் முகம், நரைத்து அங்குமிங்குமாக காற்றில் ஊசலாடிக் கொண்டிருக்கும் கேசம் இவைகள், அந்த நாட்களில் அவள் அழகியாகத்தான் இருந்தாள் என்று சொல்லிக்கொண்டிருந்தன. அவள் பதினெட்டாம் வயதில் பட்டாளத்தான் ஒருவனைக் காதலித்தாளாம்.

ராமாயியின் முகத்தில் துன்பத்தின் சாயல் எப்போதும் படிந்திருந்தது, சிற்சில சமயங்களில், நிறைவேருத ஆசைகளால் நீண்ட பகற்கனவுகளில் நிலைத்து நின்றுவிடுவாள். இந்நிலையில் அவளின் கண்கள் அவனைக்காட்டிக் கொடுத்துவிடும். எதையோ பறிகொடுத்தது போன்ற உணர்ச்சி, அதன் விளைவான ஏக்கம் இவைகள் அவள் தூக்கத்தையும், அமைதியையும் கொள்ளை கொண்டுவிட்டன. ஆபரண அலங்காரங்கள் எதுவும் இன்றி தையல் ஒரு மோதிரம் மட்டும் அணிந்திருந்தாள். கூட்டுறவுச் சங்கத்து முத்திரைபோல இருவர் கைகுலுக்குவதுபோல செய்யப்பட்ட மோதிரம். திருமணம் நிச்சயம் செய்தஅன்று அணிந்தமோதிரம்!

நிச்சயம் செய்ததிருமணம் நிறைவேருமலே போய்விட்டது. துறவுவாழ்க்கைதான் வாழ்ந்தாள் அவள். பகற்பொழுதில் பெரும்பகுதியைக் கோயிலிலேதான் கழிப்பாள். பனி பெய்தாலும், மழைகொட்டினுலும் காலை ஆறு மணிக்குக் கோயிலுக்குச் செல்லத் தவறமாட்டாள். மாரிக்காலம். ஓர்நாள் இரவு. கோயில் மணி அடிப்பது கேட்டு விழித்தெழுந்தாள். காலை பூஜை ஆரம்பமாகிவிட்டது என நினைத்து வீட்டிலிருந்து வேகமாகக் கிளம்பினுள். ஆலயத்துக்கு, எங்கும் கும்மிருட்டு, அக்கம்பக்கத்திலுள்ள எந்தப் பொருள்களும் உருவமின்றி அரூபமாகத் தோன்றியது, நடுச்சாமத்தில் குரைக்கும் காவல் நாய்களின் சத்தமோ, வண்டுகளின் "நொய் நொய்" என்ற இறைச்சலோ கூடக்கேட்கவில்லை. தனிமையுணர்ச்சி தாண்டவமாடும் கொடுமையான நேரம். பழக்கத்தின் காரணமாக, ராமாயிக்கு கோயிலுக்குப் போவது அவ்வளவு கடினமாக இல்லை. கோயிலுக்கு அருகில் வந்ததும், கதவுகள் திறந்திருப்பதைக்கண்டாள். பூஜை ஆரம்பமாகிவிட்டது என்று நினைத்து வேகமாக நடந்தாள். கோயில் வாசலைத் தாண்டி உட்புறம் வந்தாள்.

கோயிலில் பெருங்கூட்டம். ஆனல் வழக்கமாக வரும் பக்தர்களைக் காணும். எல்லாம் முன்பின் அறிமுகமாகாத புதிய முகங்களாகவே இருந்தன. பட்டும் பொன்னும் அணிந்து பழங்கால மக்கள்போல இருந்தனர். அவர்கள் கைகூப்பித் தொழும்போதும், 'பிரசாதம்' வாங்கும்போதும் கொஞ்சங்கூட சப்தம் எழவில்லை. புதுப்பட்டாடைகளின் 'சரசர' சப்தம்கூடக் கேட்கவில்லை. புதுமணத் தம்பதிகள் பலர் கைகோத்துக்கொண்டிருந்தனர். காதலும் பக்தியும் மேலிட கவிழ்ந்த தலையுடன் நின்றிருந்தனர். பூஜைசெய்யும் அர்ச்சகரும், அவருக்குத் துணை நிற்போரும் முன்பின் பழக்கமில்லாத புதிய ஆளாக இருந்தனர்.

பக்திமேலிட ஆண்டவனிடம் எல்லோரும் வேண்டிக்கொண்டிருக்கும்பொழுது, ராமாயி அருகில் இருந்தவன் மாத்திரம் அவளையே உற்றுப்பார்ப்பதுபோல் தோன்றியது. அவன் ஏன் அப்படி அவளை விழுங்கிவிடுவதுபோல் பார்க்க வேண்டும். மெதுவாக ஓரக்கண்ணல் ராமாயி பார்த்தாள் பக்கத்திலிருந்தவனை. ஆம்! அவனேதான்! ஆண்டுகள் பல உருண்டோடிவிட்டன. இருந்தாலும் அவள் நினைவு மங்கவில்லை. அவனேதான்! நீண்டநாட்களாக நினைவில் போற்றி, கனவில் வளர்த்து வந்தாளே அவன்தான். அதோ அந்தவடு! நெற்றியின் ஓரத்தில், மாங்காய் பறிக்க மரத்திலேறி கீழே விழுந்த அன்று பட்ட காயத்தின் வடு. ஆம்! அவள் காதல் நினைவுகூட ஒரு வடுதான்! முதன்முதலில் அவனைச் சந்தித்த பொழுது உடுத்தியிருந்தானே அதே உடுப்புகள்தான். அன்று கொஞ்சிப்பேசி கெஞ்சிக் கேட்டு அவள் அன்பைப் பெற்றுனே அதைப் போலவேதான் இன்னும் இருந்தான்.

கோயில், கூடியிருக்கும் மக்கள், கும்பிடவந்த கடவுள் எல்லோரையும் மறந்தாள். இன்பம் பெருக்கெடுக்க, மகிழ்ச்சி பொங்க ஆர்வத்துடன் அவனுடன் பேசலானுள். "கண்ணு! என்னுடைய விலைமதிக்கவொண்ணுத பொருளை உங்களுக்கு அளித்தேன். அதைப் பெற்றுக்கொண்ட நீங்கள் கைம்மாறு செய்யாவிட்டாலும் என்னைக் கண்ணீர் சிந்தக் கவலைப் படும்படி செய்யாமல் இருந்திருக்கலாம். ஆனல் கூந்தல் நரைத்து, கூனவிழுந்து வாழ்வின் முன்னிரவுக் காலத்தில் இருக்கும் நான் ஒருபொழுதும் தங்களிடம் கொண்ட காதலுக்காக வருத்தப்பட்டதில்லை. பழைய பாசமும் அன்பும் மாருமல் இனிமேலாவது இருப்பீர்களா? இவர்கள் எல்லாம் யார்?"

"இவர்கள் எல்லாம் காதற் குற்றவாளிகள், கண்ணே! உயிருடன் உலவும்பொழுது உலகத்தவரால் உதாசீனம் செய்யப்பட்டவர்கள் காதலித்தவர்களைப்பிரிந்து கண் கலங்குபவர்கள். ஆண்டுக்கொருமுறை பிரிந்தவர்களைக் கூடும் பேரின்பம் பெற இவர்கள் இங்கு வந்திருக்கிறார்கள். நல்லவேளையாக நானும், நீ இறப்பதற்கு முன் உன்னைக் காணும் பேறு பெற்றேன்."

"இளமையைத் திரும்பப் பெற்று உங்களுடன் இன்பமாக வாழமுடியும் என்றுல் இன்றைக்கே, இப்போதே நான் இறக்கச்சித்தமாக இருக்கிறேன், கண்ணு!"

அனுதை விடுதியில் பருவமடைந்தவர்களுக்குத் திருமணம் செய்ய நிதிதிரட்டிக் கொண்டு வந்தான் ஒருவன். காதற்குற்றவாளிகள் தானே கூடியிருந்தவர்கள்! பொன்னும், பொருளும் அள்ளி வீசி நிதிக்கு, ராமாயி பையில் கைவிட்டுத் துலவினுள். பணம் எடுத்துவர மறந்துவிட்டாள். நிதிக்குப் பணம் கொடுக்காமல் இருக்க மனம் மரவில்லை. கைகளைப் பிசைந்துகொண்டாள். கையில் ஏதோ தட்டுப்பட்டது. முகத்தில் மலர்ச்சி, நினைத்ததை நிறைவேற்றப்போகிறோம் என்ற மகிழ்ச்சிப் பெருக்கு கண்களில், திருமணம் நிச்சயம் செய்த அன்று அணிந்த மோதிரம், நிதிப் பெட்டியில் சேர்க்கப்பட்டது. மோதிரம் பெட்டியில் விழுந்த ஒலியில் நிலவியிருந்த ஒளி மங்கி இருண்டது. ராமாயி பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே திடீரென்று எல்லாம் மறைந்துவிட்டன. அந்த ஜோதியில் ராமாயி கலந்துவிட்டாள்.

நாட்டாமைக்கு 'ராமாயி கதை' நடந்திருக்குமோ என்ற ஐயத்தைக் கிளப்பியது. தரும கர்த்தா 'அருட்பெருஞ்சோதி'யின் கதை தெரிந்தவர். வடலூர் யாத்திரை அடிக்கடி செல்பவர். 'அடிகளார்' மாதிரி 'அம்மை' யாரையும் ஏன் ஆண்டவன் அழைத்துக் கொண்டிருக்கக்கூடாது என்று வாதாடினர். மனதிற்குள்தான், முடிவில் சவத்தை அடக்கம் செய்ய ஏற்பாடுகள் செய்தார்கள். மிக விமரிசையாக சவ அடக்கம் நடந்தது. ராமாயி 'ஜோதி' யில் கலந்ததின் மர்மம் பற்றி ஊரெங்கும் ஒரே பேச்சாக இருந்தது.

சந்தேகத்தின்பேரில் ராமாயியின் வேலைக்காரனைப் போலீசார் கைதுசெய்து சென்றனர். சிலநாட்களுக்குப் பிறகு உற்றார், உறவினர் அற்ற ராமாயி சொத்துக்களை என்ன செய்வது என்ற கேள்வி எழுந்த பொழுது அர்ச்சகர், ராமாயி இறக்கும் தருவாயில் தன்னிடம் சொல்லிச் சென்றதாகக் கூறி கோயிலுக்குச் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று கூறினர். கோயில் பெயரை வைத்து அர்ச்சகரின் கைக்கு சொத்து மாறியது, வழக்கப்படி, அர்ச்சகரும் தர்மகர்த்தாவும் சொத்துக்களை அனுபவித்துவந்தனர்.

பூக்கட்டும் பொன்னுரங்கம் சிலதினங்களில் பைத்தியம்பிடித்து உளர ஆரம்பித்தான். அவன் உளறல் பெரும்பாலும் கோயில் அர்ச்சகர், ராமாயி கொலை இதுபற்றியே இருந்தது. உள்ளூர் சப் இன்ஸ்பெக்டர் சாந்தலிங்கம், ராமாயி முக்தியடைந்த கதையை நம்பாமல் அவன் வீட்டு வேலைக்காரியை சந்தேகத்தின்பேரில் கைதுசெய்து சென்றார். சாந்தலிங்கம் பெயருக்கேற்ப சாந்தசொரூபியாக இல்லாவிட்டாலும் மற்ற சப்இன்ஸ்பெக்டர்களைக்காட்டிலும் கொஞ்சம் மனிதத்தன்மை உடையவர். வேலைக்காரனை சாம, பேத, தான, தண்டத்திற்கு உட்படுத்தியும் அவனிடமிருந்து ராமாயி இறந்ததுபற்றிய செய்தி எதுவும் தெரியாமல் போகவே, எப்படியாவது இந்த மர்மக்கொலை பற்றிய உண்மையைக் கண்டுபிடிப்பதில் அதிக அக்கரையுடையவராயிருந்தார்.

இதே கவலையாகச் சுற்றியவருக்கு பூக்காரப் பொன்னுரங்கத்தின் உளறலுக்கும் ராமாயி இறந்ததற்கும் ஏதோ சம்பந்தம் இருப்பதாக ஊகித்தார். அதன்படி பூக்கட்டும் பொன்னு ரங்கத்தைப் பட்டினத்தில் பைத்தியக்கார விடுதியில் சேர்ப்பதாகக்கூறி அழைத்துச் சென்று அவனுக்குத்தக்க வைத்திய உதவிகள் செய்து அவன் பைத்தியம் நீங்க உதவி செய்தார். அதன்பிறகு பொன்னுரங்கத்தின் வாயிலாக, அர்ச்சகருக்கும் ராமாயிக்கும் கோயிலில் அவள் இறந்த தினத்தன்று காலையில் அர்ச்சகர் கொடுக்கவேண்டிய கடன் சம்பந்தமாக வாக்குவாதம் முற்றி கோபத்தில் அர்ச்சகர் ராமாயியைத் தாக்கியதாகவும் 'சுவரில் மண்டை மோதி அந்த இடத்திலேயே ராமாயி இறந்ததாயும், அப்பொழுது காலைப் பூஜைக்கு மலர்கொண்டு வந்த பொன்னுரங்கம் பார்த்ததாகவும் அறிந்தார். பொன்னுரங்கம் இந்தச் செய்தியை வெளிப்படுத்திவிடாமல் இருப்பதற்காக அவனுக்கும் தெரியாமல் 'பிரசாதம்' என்றுகூறி ஏதோ மருந்தைக் கொடுத்தார் அர்ச்சகர். அதன்வினைவே பொன்னு ரங்கம் பைத்தியமானன்.

அர்ச்சகர் வாழாவெட்டியாக இருந்த தம் மகளை மருமகனிடம் அனுப்புவதற்காக வீட்டிலிருக்கும் பழைய நகைகளை அழித்துப் புது நகைகள் செய்ய விரும்பி தட்டானை அழைத்து அவர் வீட்டிலேயே இருக்கச்சொல்லி பழைய நகைகளுடன் ராமாயி கையில் போட்டிருந்த தங்கமோதிரத்தையும் கொடுத்தார். சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சப் இன்ஸ்பெக்டர் சாந்தலிங்கம் தட்டான்மூலம் விஷயமறிந்து அர்ச்சகரை கைதுசெய்தார். பொன்னுரங்கம் முதல்சாட்சி. தட்டான் இரண்டாவது சாட்சி. விசாரணையில் முடிவில் நீதிபதி மக்கள் அறியாமையில் மூழ்கி பகுத்தறிவுக் கொவ்வாத கதைகளை நம்பி உண்மைக் குற்றவாளிகளைத் தண்டிக்காமல் விடுவது தவறு எனக் கூறிப் பத்துவருடக் கடுங்காவல் தண்டனை விதித்தார். அத்துடன் பரம்பரைப் பாத்தியதையான அர்ச்சகர் தொழிலையும் பிடுங்கிவிட்டார்.



## நல்ல தீர்ப்பு

பன்னிரண்டு ஆண்டுகாலம் இன்பமாய் மணவாழ்க்கை நடத்திவந்த ஒரு கணவன் மனைவி ஆகியோர்க்கிடையே சிறு தகாறுகள் மூண்டெழுந்தன. மணவிலக்குச் செய்து கொள்வது என்ற முடிவுக்கு அவர்கள் இருவரும் வந்து, வழக்கு மன்றத்தில் அதற்கான அனுமதி கோரினர்.

அவர்களுக்கு மூன்று குழந்தைகள் பிறந்திருந்தனர். அந்த மூன்று குழந்தைகளைத் தத்தம்மிடம் ஒப்படைக்கத் தீர்ப்பு வழங்குமாறு இருவரும் தனித்தனியே விண்ணப்பித்துக்கொண்டனர்.

வழக்கை ஆய்ந்து பார்த்த நீதிபதிக்கு என்ன செய்வது என்று தோன்றவில்லை. இறுதியில் அவர் தீர்ப்பு ஒன்று அளித்தார்; "நீங்கள் இருவரும் குழந்தைகளை விரும்புகிறீர்கள். மூன்று குழந்தைகளை உங்களிருவரிடையே எப்படிச் சரிசமமாய்ப் பங்கு பிரித்துக் கொடுப்பது என்பது எனக்குப் புலனாகவில்லை. ஆனல் வேறோர் வழிவகை எனக்குப் புலப்படுகிறது. நீங்கள் இருவரும் உங்கள் வீட்டிற்குச் சென்று மற்றும் ஒரு குழந்தையை ஈன்றெடுக்க முயலுங்கள். அப்படி ஒரு குழந்தையைப் பெற்றெடுத்த பிறகு வாருங்கள். பிறகு வேண்டுமானல் இருவர் விருப்பத்தையும் நிறைவேற்றும் வகையில் ஆவன செய்ய முயலுகிறேன்" என்பதே அத்தீர்ப்பு.

ஓராண்டு காலம் கழித்துப் பிறந்த நான்காவது குழந்தைக்குப் பெயரிட, அந்த நீதிபதியையே, அந்த மணமக்கள் விரும்பி அழைத்தனர்.

நீதிபதி அளித்த அந்த நல்ல தீர்ப்பு, அந்தக் கணவன்-மனைவியரை ஒன்று சேர்த்ததோடு, அவர்களை மகிழ்ச்சிப் பெருங்கடலிலும் திளைத்திருக்கச் செய்தது.





# புத்தரின் கேள்வி?

ஆட்டுக்குட்டியைப் புத்தர் கையில் எடுத்துக்கொண்டதும், ஆட்டு மந்தையை ஓட்டிச் சென்ற ஆட்டிடையன் அருகில் வந்தான். யாரோ ஒரு காவியுடைதாரி ஆட்டுக்குட்டியைத் தூக்கிப்போக முயலுகிறார் என்பது அவனுடைய அச்சம்.

"ஆட்டுக்குட்டியைக் கீழே விடுங்கள்!" இடையன் அதட்டினன்.

"அதன் காலில் காயம்பட்டிருக்கிறது. நான் அதைத் தூக்கிவருகிறேன். நீ இந்த ஆட்டுமந்தையை கடும்வெய்யலையும் பாராது எங்கு அழைத்துச்செல்கிறாய்?" என்று புத்தர் கேட்டார். ஆட்டு மந்தையை ஓட்டிச் செல்பவர்கள், பகலில் இளைப்பாறி, மாலை நேரத்தில் கிளம்புவதுதான் வழக்கம்.

"பிம்பிசார அரசரது யாகசாலைக்கு இந்த ஆடுகளை ஓட்டிச்செல்கிறேன். இன்றைய இரவு ஆடுகளைப் பலியிடுவார்கள்!"

யாகசாலை! இந்த ஆடுகளனைத்தும் பலியிடப்படும்! எல்லா ஆடுகளும்—துள்ளி ஓடுகிற ஆட்டுக்குட்டியிலிருந்து, அவர் கையில் துவண்டிருக்கும் சிறுகுட்டிவரை வெட்டப்படும்! யாகப்புரோகிதர் வெட்டுவார், யாகசாலையில் இரத்தம் வழிந்தோடும்!

புத்தர் சிறிது யோசித்து "சற்று இரு, நானும் அங்கு வருகிறேன்! முதலில் இந்தக் காயத்தைக் கட்டிவிடலாம்!" என்று மரத்தடியில் உட்கார்ந்து, ஆட்டுக்குட்டியின் காலைத் துடைத்து, அதற்குக் கட்டுப்போட்டார்.

புத்தரின் செய்கை அவரருகில் இருந்த தவசிகளுக்குக் கோபத்தையும் வருத்தத்தையும் கொடுத்தது. தவக்கோலத்திலிருக்கும் ஒருவர் தவநிலை மறந்து இருக்கிறாரே யென்று. அந்தநேரத்தில், தியானத்தில் அமர்ந்து ஆண்டவன் நாமத்தை ஆயிரத்தெட்டு தடவைகள் உச்சரித்துத் தர்ப்பைப் புல்லை விரலில் சுற்றி, மாவிலையால் கமண்டலத்திலிருக்கும் நீரை எடுத்துத் தெளித்துத் தன்னையும் தன் சுற்றுப்பக்கத்தையும் புனிதமாக வைத்துக்கொள்ளவேண்டும். ஆனல் இவரோ ஆண்டவனைத் தியானிக்க வேண்டிய நேரத்தில் ஆட்டுக்குட்டியின் காலைப்பிடித்துக் கொண்டிருக்கிறார். தாழ்ந்த சாதியினனான இடையனுடன் பேசுகிறார். அது மட்டுமா? தர்ப்பைப்புல்லை ஆட்டுக்குக் கொடுக்கிறார் கமண்டல நீரை எடுத்து, அதன் காலைக்கழுவி விடுகிறார்! உலக பந்தங்களை அறுத்து முக்தி பெறத் தவஞ்செய்யும் முனிவர் உலக மாயையில் சிக்கலாமா? இடையனுடன் பேசிக்கொண்டிருப்பதும், ஆட்டைத்தூக்கி வைத்துக் கொண்டு விளையாடுவதும் தவசியின் செயலா?

"சித்தார்த்த முனி கெட்டுவிட்டார்! காலையில், ஆற்றங்கரையில் ஒரு கன்னிப்பெண் அவருக்கு உபசாரங்கள் செய்தாள். இவர் புன்னகையுடன் எழுந்துவந்தார். அதற்குப் பின் தியானத்தில் உட்காராமல் பெண்ணை நினைத்தபடி மயங்கியிருந்தார். இப்பொழுது ஆட்டுமந்தையைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்!"

அருகிலிருக்கும் தவசிகள் பேசிக்கொள்வது புத்தரின் காதில் விழுந்தன. மற்ற தவசிகள் புத்தரைப்பற்றி பேசிக்கொண்டிருப்பது வீணான காரியம், அந்த நேரத்தில் தியானம் செய்தால், ஒற்றைக்காலில் நின்று நாமாவளி செபித்தால் அது மேலானது என்று அகோரத் தவங்களைச் செய்யத்தொடங்கினார்கள். முள்மெத்தையில் படுப்பவர்கள், தணல் மீது நடப்பவர்கள், தலைகீழாக நிற்பவர்கள், சாம்பலைப்பூசி, மண்டையோட்டைவைத்து

மந்திரம் சொல்பவர்கள்,—தத்தம் தவமுறைகளைச் செய்ய ஆரம்பித்தார்கள்.

புத்தருக்கு அருகில் இருந்த முனிவர், மிக வருத்தத்துடன் சொன்னார். "சித்தார்த்தனே! அகோரத்தவசிகள் மத்தியில் நீ மட்டும் ஒரு அஞ்ஞானியாகிவிட்டாய்! மாயா உலகை வெறுக்கவேண்டியவன் மாயா பந்தங்களில் சிக்குண்டாய்! மற்ற முனிவர்களைப்பார்! இந்த உலக வாழ்வை ஒடுக்கி, உடலின் உணர்வுகளை அழித்து, கடுமையான தவத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்! ஆனால் நீ செய்த தவங்களின் பலன் வீணாகிறது!'

புத்தர் சிறுநகை புரிந்தார். "முனிவரே! நான் ஒன்று கேட்கிறேன்! இந்த முனிவர்களின் தவங்களையெல்லாம் ஒன்று சேர்த்தாலும், அதனால் உலகில் யாருக்காவது பயன் உண்டா? சிறு உயிரின் துன்பத்தைப் போக்கவாவது உதவுகிறதா?"

புத்தரின் கேள்வி பிராமண முனிவரைத் திகைப்படையச் செய்தது. புத்தரின் கேள்வி அவருக்குப் புரியாமலில்லை, புரிந்த காரணத்தால்தான் திகைப்படைந்தார். உலகு படும் துன்பங்களைப்பற்றிக் கவலைப்படாமல், மரத்தடியில் உட்கார்ந்து மகேசனைப்பற்றிப் பாடிக்கொண்டிருப்பதைப் புத்தரின் கேள்வி சுட்டிக் காட்டியது. தவங்களின் பயனை ஏதாவது பலன் கிடைத்தாலும், அது தவஞ் செய்பவர்களை மட்டும் மேலோகத்துக்கு அனுப்பப்பயன்படும். அதனால் மற்றவர்களுக்கு என்ன பலன்? தவசிகளின் நோக்கத்தில் வடிகட்டிய சுயநலம் இருந்தது.

ஆட்டுக்குட்டியை அணைத்துத் தூக்கிக்கொண்டு புத்தர் மேலே சொன்னார், "உலகின் துன்பங்களையெல்லாம் பார்த்தபடி, பேசாமல் அமர்ந்து அகோரத்தவத்தில் ஈடுபடும் ஆயிரக்கணக்கானவர்களைவிட, ஒரு ஆட்டுக்குட்டியின் சிறு துன்பத்தைப் போக்குபவன் செய்யும் பணி மேலானது!"

ஆட்டுக்குட்டியைத் தடவிக்கொடுத்து, புத்தர் நடக்க ஆரம்பித்தார். தாய் ஆடு, அவரைக்கனிவுடன் பார்த்தபடி அருகில் வந்தது. ஆட்டு மந்தை நகர்ந்தது, பிம்பிசாரன் யாகசாலையை நோக்கி!

பிராமண முனிவரைப்பார்த்து புத்தர் கேட்ட கேள்வி அவருடைய அன்பு மார்க்கத்திற்கு அடிப்படையாக அமைந்தது என்று கூறலாம்.

பிராமண வேதாந்திகளும், முனிபுங்கவர்களும் அகோரத்தவஞ் செய்தார்கள்; அவர் எதிர்பார்த்ததெல்லாம், ஆலால சுந்தரனின் அருள் கிட்டும், அந்த உலகில் இடையூ இன்பம் கிடைக்கும், பாவங்களை நீக்கிடலா தேவலோகம் செல்லலாம் என்பவை! அவ கள் பாடுபட்டது தங்களுக்காக, இந்த உலகி இல்லையென்றாலும் மறுஉலகில் இன்ப கிடைக்கவேண்டுதற்காக! அதன் அடி படையில் சுயநலம் இருக்கிறது! உலகம் அழி தாலும், மற்றவர்கள் ... துடிதுடித்தாலும், அவர்கள் கவலைப்படு தில்லை! மக்களின் கூக்குரல், ஏழைகளி கதறல், நோயாளியின் அழுகுரல் மகேசனை பற்றியும் மறுவுலகத்தைப் பற்றியும் நினை துக்கொண்டிருக்கிற அவர்களின் காதி விழுவதில்லை!

புத்தரின் கேள்வியில் பொதுநலம், இரு தது. மற்றவர்களுடைய துன்பத்தை போக்குவது அதன்மூலம் இன்பங்காணுவது அதுவே அன்பு மார்க்கத்தின் முக்கி கொள்கையானது.

மற்ற மதத்தினர் மகேசனைப்பற்றியு ஆண்டவனைப்பற்றியும், மறுஉலகத்தை பற்றியும் விதவிதமான கடவுள்களைப்பற்றியு பேசிக்கொண்டிருந்தபொழுது புத்தர்மட்டு "கடவுளைப்பற்றி ஒன்றும் தெரியாது. அதை பற்றிக்கவலைப்படவும் வேண்டாம். துன்ப படும் மக்கள் கூட்டம் இருக்கிறார்கள். அவ களின் துன்பங்களைப்போக்கிட முயலுவோ மாக!" என்று சொன்னார்.

பக்தி வேண்டுமென்று மற்ற மதத்தின போதித்தனர். பிறவுயிர்களிடம் அன்பு காட் வேண்டுமென்று புத்த மதம் போதித்தது.

காடுகளுக்குச் சென்று அகோரத் தவ செய்வதன் மூலம் நிலையான இன்பம் பெறல மென வேதாந்திகள் நம்பினார்கள். நாட்டு மக் ளுக்குப் பணிபுரிந்து, அவர்கள் துன்ப களைவதே உண்மையான இன்பம் என் புத்த மதத்தினர் கருதினர்.

வேத வாக்குகளில் சந்தேகங்கொள்வ கூடாது, அது பெரும் பாவமென்று மற் மதத்தினர் நம்பினார்கள். ஆனால் எதை கண்டாலும் கேள்வி கேட்பது, அதை அ படியே ஏற்றுக்கொள்ளாமல் சந்தேகத்துட ஆராய்ந்து, அறிவுக்கு ஒத்துவந்தால் மட்டுமே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பது புத்தரின் கொள்கை. எதையும் வேத வாக்காக, முடிந் முடிபாக ஏற்றுக் கொள்வதை புத்தர் ஆத ரிக்கவில்லை.



ஒருசமயம் காளம நாட்டுக்குப் புத்தர் சென்றபொழுது, அங்கிருந்தவர்கள் கேட்டார்கள். "பிராமணர்களும் மற்றவர்களும் எங்களிடம் வந்து மதபோதனை செய்கிறார்கள். ஆனால் ஒவ்வொருவரும் தாங்கள் கூறுவதுமட்டும் உண்மை மற்றவர்களின் மதக்கொள்கைகளெல்லாம் பொய்யானவையென்று வலியுறுத்துகிறார்கள் இவர்களுடைய போதனைகளைக் கேட்டு எங்களுக்கு குழப்பம் வருகிறது, எது உண்மையான ... வில்லை."

புத்தர் அதற்குப் பதிலளித்தார். "தரப்படும் கருத்துக்களைப்பற்றி இயல்பாகக் கேள்விகள் எழ வேண்டும். பல தலைமுறைகளாக வந்தது, பல இடங்களில் நிலவுவது என்பதற்காக எதையும் அப்படியே நம்பிவிடாதீர்கள்! பலர் நம்புகிறார்கள், பலர் பேசிக்கொள்ளுகிறார்கள் என்பதற்காக எதையும் ஏற்றுக்கொள்ளாதீர்கள்! பழைய முனிபுங்கவர் ஒருவர் எழுதினார் என்று ஆதாரங் கூறப்பட்டாலும் நம்பிவிடாதீர்கள்! அபூர்வமானதா யிருக்கிறது, ஆதலால் இதை ஒரு தேவனோ, அல்லது ஒரு அவதாரப் பிறவியோ செய்திருக்க வேண்டுமென்று ஒப்புக்கொள்ளாதீர்கள்! உங்கள் மனதிற்குப் பிடித்தமானதா யிருக்கிறது என்பதற்காகவும் ஒன்றை எடுத்துக் கொள்ளாதீர்கள். சீர்தூக்கி, ஆராய்ந்து, அது பகுத்தறிவுடன் ஒத்துவந்தால், அது எல்லோருக்கும் நன்மை பயப்பதாக இருந்தால். அந்தக் கொள்கையை ஏற்றுக்கொள்ளுங்கள்."

தனது கடவுளே உண்மையான கடவுள், தனது வேதமே தேவ வாக்கு, அதை அப்படியே நம்பி நடப்பவர்களுக்குமட்டும் மோட்சலோகத்தில் இடம் கிடைக்கும், நம்பாதவர்களுக்குப் படுநரகந்தான் என்று மற்ற மதங்கள் போதிக்கின்றன. மற்ற மதத்தலைவர்கள், ஆச்சாரியார்கள், தூதர்கள், கடவுளின் பிரதிநிதிகள் எல்லோரும் முடிந்த முடிவுகளை, வரையறுத்த மதக்கொள்கைகளைத் தந்தார்கள். புத்தர் மட்டும் எதையும் முடிபாக, அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதாகச் சொல்லவில்லை.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."
"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்று வள்ளுவர் கூறிய கருத்துக்களுக்கும், மேலே குறிக்கப்பட்ட புத்தரின் அறிவுரைகளுக்கும் எவ்வளவு ஒற்றுமை யிருக்கின்றன!

கண்மூடித்தனமாக ஏற்றுக்கொள்வதை புத்தர் ஆதரிக்கவில்லை. நம்பித்தான் ஆக வேண்டும் என்ற கட்டாயமும் அவரிடம் கிடையாது. கேள்விகள் கேட்பது, கொடுத்த கருத்தை ஆராய்வது, இவற்றை புத்தர் வளர்த்தார். உண்மையில், அறிவுக்கு ஒத்து வந்த பிறகுதான் எதையும் ஒத்துக்கொள்ள வேண்டுமென்று அவர் சொன்னார். மற்றவர்களுக்கு மட்டுமல்ல, தான் சொல்லும் கருத்துக்களுக்கும், அதே அறிவாராய்ச்சி முறையை வைக்க வேண்டுமென்றும் அவர் சொன்னார். "நான் சொல்லும் கோட்பாட்டை, பயபக்தி காரணமாக அப்படியே ஏற்றுக்கொண்டு விடாதீர்கள். நெருப்பில் தங்கம் போட்டு ஆராயப்படுவதைப் போல், அறவாராய்ச்சியில் போடப்பட்டுக் கருத்துக்கள் ஒத்துக்கொள்ள வேண்டும்!" என்று புத்தர் தன் கூட்டத்தினருக்கு அறிவுறுத்தினார்.

பழைய சம்பிரதாயம், வேதவாக்கு என்று எதையும் புத்தர் ஏற்றுக்கொள்வதில்லை. அதிலும் பிராமண மதத்தினரின் போக்கும், அதிகாரக் குரலும் அவருக்கு வேம்பாக இருந்தன. "தெய்வீகம், வேதவாக்கு, கடவுள் செய்தது" என்று பிராமணர்கள் ஆதாரங்கள் காட்டுவதைப் புத்தர் எதிர்த்தார். "அது குருடர்கள் ஒருவர்பின் ஒருவராகச் செல்வதை ஒக்கும். முதலில் செல்லும் குருடனுக்கு வழி தெரியாது, மத்தியில் செல்லும் குருடனுக்கும் வழி தெரியாது, கடைசியில் செல்லும் குருடனுக்கும் வழிதெரியாது."

கேள்வி கேட்பது, அறிவு துணைகொண்டு ஆராய்வது புத்தரின் கோட்பாடுகளுக்கு அடிப்படையாயின.

புத்தர் கேட்ட கேள்விகள் பலப்பல, கடவுளைப்பற்றி, வேதங்களைப்பற்றி, மதங்களைப்பற்றி, சாதிகளைப்பற்றி அவர் கேட்ட கேள்விகள், ஆணவத்துடன் ஆட்சி செய்து வந்த பிராமண மதத்தைக் கலகலக்கச் செய்தன. புத்தரின் கேள்விகள், அறிவாராய்ச்சி செய்யும் வரண்ட பாலைவனத்துக்குள் அவரை அனுப்பவில்லை. உலகின் நிலையை உணராமல், வானத்தைப் பார்த்து வேதாந்தம் பேசுவோர்கள் உண்டு. ஆனால் புத்தரின் கேள்விகளும், விளக்கங்களும், உண்மைகாணுவதுடன், உலகின் துன்பங்களை அழித்து இன்பங் காணுவதற்கும் பயன்பட்டன.

கேள்விகளைக் கேட்டு ஆராய்வதன் மூலம், உண்மை வெளிப்படுகிறது என்பது மட்டும் போதாது. உண்மை என்று ஒருவனுக்கு முதலில் கிடைத்தாலும். அதன்மீது கேள்விகள் போட்டு அறிவாராய்ச்சியில் ஈடுபட வேண்டும். அப்பொழுதுதான் அதன் பலன் அவனுக்குக் கிடைக்கும். அதற்கு இரண்டு உதாரணங்களை அவர் தந்தார்.

சுவையான தேன்! அதை வைத்திருக்கும் கிண்ணத்துக்கு அதன் இனிமை தெரியாது. அதைப்போல உண்மையை ஆராயாது ஏற்றுக்கொள்பவன், தேனைச் சுவைக்கத் தெரியாது வைத்திருக்கும் கிண்ணத்தை ஒத்திருக்கிறன்.

அரசவையில் அரசன் போய்விடுகிறன். அரியணை காலியாகக்கிடக்கிறது, அதைப் பார்த்த வேலைக்காரன் ஒருவன் அரசனின் உடைகளை அணிந்து அரியணையில் அமர்ந்து அரசன் சொல்லும் வார்த்தைகளைச் சொல்லுகிறன். அவனை அப்பொழுது பார்க்கும் யாரும் அரசனுக ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

உண்மை உள்ளத்தில் உறையவேண்டும். அப்பொழுதுதான் அதன் பலனும் நலனும் வெளியுலகுக்குப்பயன்படும். உண்மையைக் காணுவதுடன், அதை அனுபவசாத்தியமாக ஆக்கவேண்டும். அறிவாராய்ச்சியைப்பற்றி மற்றொரு இடத்தில் கூறிடும்பொழுது "ஒருவருடைய கருத்துக்களை மற்றவர்கள் ஆராய்ச்சியின்றி நம்பிவிடக்கூடாது, முத்தோர்கள் சொன்னது, புத்தர் சொன்னர், சங்கம் சொல்கிறது என்று எந்த ஆதாரங் காட்டினலும் ஒருவர் சொல்வதை மற்றவர் ஏற்றுக் கொள்ளக்கூடாது. உண்மையென்பதை அதன் போக்கில் விட்டுவிடாமல், மற்றவர்கள் தர அப்படியே ஏற்றுக் கொள்ளாமல், தன் மனதில் ஆராய்ந்து பின் ஏற்றுக் கொள்ள வேண்டும். சம்பிரதாயத்துக்கும், ஆதாரங்களுக்கும் அடிபணிவதில் பலன் கிடையாது. அறிவு பெற, பயிற்சியும் கேள்வியும் முக்கியமானவை. பயிற்சியில் அனுபவமும், ஆராய்ச்சியும் பங்குபெற வேண்டும்."

புத்தரின் மார்க்கம், அறிவின் வயப்பட்டதாக, அன்பு வழிப்பட்டதாக, மனிதாபிமானம் மிக்கதாய் ஆரம்பித்தது. வாழ்வின் நலம் என்ற உயர்ந்த பண்புக்கு புத்தமார்க்கம் அழைத்துச்சென்றது. மற்ற மதத்தலைவர்கள், வேதகர்த்தாக்கள், மார்க்கங்கண்ட தீர்க்கதரிசிகள் எல்லோரும் முடிந்த உண்மைகளை, கடவுள் தந்த வேதவாக்குகளைத் தந்தபொழுது, புத்தர் மட்டும் தன் அறிவுக்குப் பட்ட கருத்துக்களைத்தந்தார், உள்ளத்தில் எழுந்த அன்புரைகளை வழங்கினர். தெய்வீகமென்றே, கடவுள் வாக்கு என்றே எதையும் அவர் சொல்லிக்கொள்ளவில்லை.

மகேசனையும் மறுவுலகத்தையும் தேடி, மற்ற மதத்தினர் தேடித்திரிந்தபொழுது, புத்தர் மட்டும் மக்களையும், அவர் தம் இன்ப துன்பங்களையும் பற்றி எண்ணினர். அகோரத் தவம் செய்தால் ஆண்டவனையடையலாம், தேவலோகம் போகலாம், என்று மற்றவர்கள் உலகைவிட்டு விலகிச்சென்றபொழுது, புத்தர் "அகோரத்தவங்கள், உலகில் ஒருசிறு உயிரின் துன்பத்தைப்போக்கவாவது பயன்படுமா?" என்று கேட்டார். அந்தக்கேள்விக்கான விடை, பின் அன்பு மார்க்கமாக மலர்ந்தது.

மகேசனல்ல, மக்கள்!

மறுஉலகமல்ல, இந்த உலகம்!

மாயாவாதங்களல்ல, ஆராய்ந்து பார்க்கும் திறன்!

நான்கு சாதிகளும் நாலாயிரம் பிரிவுகளும் அல்ல. ஒன்றே குலம் என்ற கோட்பாடு!

சுயநலமல்ல, பொது நலம்!

கொடுமை செய்தல்ல, அன்பின் வழி அவர் மார்க்கம் திழைத்தது!

புத்தர் எழுப்பிய கேள்விகள் பரவப் பரவ பிராமண மதம் தத்தளித்தது, சாதி பேதங்கள் சருகுகள்போலச் சுழன்றன! அஞ்ஞானமும், கண்மூடித்தனமும் நிறைந்த நாட்டில், அறிவின் ஒளியாய், அன்பின் வடிவாய் புத்தர் நடமாடினர்!

மதவெறியும் புராணப் புளுகுகளும் மாயாவாதங்களும் நிறைந்த நாட்டில், முதல் பகுத்தறிவு வாதியாய் புத்தர் வெளிவந்தார்! அவருடைய கருத்துக்கள் சில இன்று குறைபாடுடையதாய்க் காணப்படலாம்; அன்று இருந்த சூழ்நிலையில், அன்று கிடைத்த அறிவாராய்ச்சிகளில் பல கருத்துக்களை அவர் வழங்கினர். முடிந்த முடிபுகளென்றே, கடவுள் தந்தவையென்றே, 'நம்பாவிட்டால் ரௌரவாதி நரகம்' என்றே பயமுறுத்தாமல், மக்களின் ஆராய்ச்சிக்கு முதலிடம் அளித்து, தமது கருத்துக்களை அவர் பரப்பினர். தமது அன்பர்களையும், முக்கியமான புத்த சாதுக்களையும் பார்த்துசொல்லும்பொழுது "பிட்சுக்களே! மக்கள் நலமடைய உலகம் நன்மையடைய, உலகமக்கள் அனைவரிடமும் முழு அன்புடன் பணிபுரிய நீங்கள் செல்லுங்கள்!" என்று வாழ்த்துரை கூறப்பட்டது. நாடெங்கும் சுற்றிய புத்த சாதுக்கள் மக்களின் இன்னலைப் போக்கி, நோய் நொடிகளை ஆற்றி, வெறுப்பைக்குறைத்து அன்பை வளர்த்து, சண்டைகளைத் தீர்த்து அமைதியை நிலவச்செய்து, அன்பு மார்க்கத்தைப் பரப்பினர்கள்!



மற்ற மதத்தலைவர்கள் நாட்டு மக்களை காட்டுக்குத் துரத்தியடித்தபொழுது, வாழ்வைவிட்டு கடுந்தவத்துக்குத் துரத்தியடித்தபொழுது, புத்தர் காட்டைவிட்டு நாட்டுக்குள் வந்தார். உலகுபடும் துன்பங்களைப்பார்த்தபடி உட்கார்ந்திருக்கும் ஆயிரக்கணக்கான முனிவர்கள் சிரேஷ்டர்கள், முக்தர்கள் பித்தர்கள் இவர்களைவிட, மற்றொரு உயிரின் துன்பத்தை போக்குபவன் மேலானவன் என்று அவருக்குப்பட்டது.

ஆண்டவனை நோக்கி அர்ச்சிக்கும் ஆயிரத்தெட்டு நாமங்களைவிட, பிறவுயிரிடம் சொல்லப்படும் ஒரு அன்புச்சொல் மேலானதாக அவருக்குப்பட்டது.

மற்றவர்களின் மதமும் வேதமும், தவமும் துறவும் தனிப்பட்டவர்களுக்கு மோட்சமளிக்க —மறுவுலகில் வசதியளிக்க ஏற்பட்டவை. புத்தரின் அன்புமார்க்கம் பிறவுயிர்களின் துன்பத்தைப்போக்க ஏற்பட்டது. வேதமார்க்கங்கள் ஆண்டவனிடம்போக வழிதேடின, இந்த உலகத்திலிருக்கும் ஒரு ஆத்மாவை கண்ணுக்கெட்டாத தூரத்திலிருக்கும் பரமாத்மாவுடன் இணைக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தன. புத்தரின் கோட்பாடு உலகத்திலிருக்கு ஒரு ஆத்மாவை—உயிரை மற்றொரு உயிருடன் அன்பு வழியில் இணைக்கும் வேலையில் ஈடுபட்டது.

டிருந்தன. புத்தரின் கோட்பாடு உலகத்திலிருக்கும் ஒரு ஆத்மாவை—உயிரை மற்றொரு உயிருடன் அன்பு வழியில் இணைக்கும் வேலையில் ஈடுபட்டது.

ஆறு ஆண்டுகளாக, ஆண்டவனையும் வேத மார்க்கத்தையும் முன் வைத்துச்செய்து வந்த கடும்தவத்தையும் கைவிட்டு, அடிபட்ட ஆட்டுக்குட்டியைத் தூக்கிக்கொண்டு புத்தர் காட்டைவிட்டுப் புறப்பட்டபொழுது, மற்ற தவசிகள் கோபித்தனர், எரிதவழ் கண்களால் உருட்டி விழித்தனர்.

அன்பு வழிந்திட, சாந்தம் குழைந்திட, புன்முறுவலுடன் சாக்கியமுனி தனது தவ வேலையைவிட்டு ஆட்டுக்குட்டியைச் சுமந்து வருவது கண்டு, மகதநாட்டு மக்கள் ஆச்சரியப்பட்டனர், வியந்தனர், போற்றினர்!

அடிபட்ட ஆட்டுக்குட்டியைப் புத்தர் அணைத்துச் செல்வது, துன்புற்ற உலகை அன்பால் அவர் அணைத்துச் செல்வதுபோலிருந்தது!

உலககுக்கு உழைத்த உத்தமர் வரிசையில் புத்தர் முதலிடம் பெறுகிருர்! தனக்கென வாழாப் பிறர்க்குறியானன், அன்பொளிவீசிடும் அணையாத சுடர்! புத்தரின் பெயர் உலகுள்ளளவும், உலகில் அன்பும் பண்பும் உள்ளளவும் மறக்க முடியாததாகும்!



---

உயர்தர அதிகாரிகள் வழக்கமாகச்செல்லும் ஒரு ஓட்டலுக்கு ஒரு சமயம் ஒரு அரசியல்வாதி சென்றிருந்தார். அங்கே நுழைந்ததும் தனக்குத்தெரிந்த நீதிபதி ஒருவர் அங்கே உட்கார்ந்து தேனீர் அருந்திக் கொண்டிருப்பதைக் கண்டார். அவரிடம் சென்று,

"குட்ஈவினிங்! என்னசார்! டீயா? அது உடம்புச் சூட்டை அதிகமாக்குமே. இந்த நேரங்களில் குளிமை தரும் பானங்களைப் பருகவேண்டும். ஏன், தாங்கள் ஜின் சாப்பிட்டுப் பார்த்ததில்லையா?" என்ருர் அரசியல்வாதி.

"இல்லை! ஆனல் சாப்பிட்டவர்களை அதிகம் பார்த்திருக்கிறேன்" என்ருர் நீதிபதி.

---

# பிரிவுபசாரம்

(ராணி)

என் உயிரே!

நீ இவ்வுலகில் உதித்த அன்றைய தினத்தி லிருந்து இன்றுவரை உன்னுடன் உன்வாழ்வு, தாழ்வு இரண்டிலும் இணைபிரியாத துணை யாய் நின்றேன். 'நினைக்கவும் என் நெஞ்சு நடுங்குகிறது. என் கண்கள் மூடியவைகள் தான், திறக்கவே இல்லை! ஆம்! வி என் றைக்குமே திறக்காது...இன்று நீ என்னைவிட் டுப் பிரிந்துவிட்டாய். என் மகிழ்ச்சி, உன் மகிழ்ச்சி: உன் துன்பம் என் துன்பம் என நினைத்து உன்னுடன் இரண்டறக் கலந்து பழகிய என்னைத் தனியே தவிக்க விட்டுவிட்டு நீ எங்கோ சென்றுவிட்டாய்!

நீ வளமாக வாழ்ந்த காலத்தும், வறுமை யில் சிக்கித் துவண்ட காலத்தும் உன்னுடன் இருந்தேன். பண்மும் பகட்டும் கண்டு உன் னுடன் பழகி, பசியும் துன்பமும் அடைந்த காலத்தில் உன்னைவிட்டு அகன்ற எண்ணற்ற மனிதர்களைப் போலன்றி இரவும் பகலும் இன்னபிற நேரங்களிலும் உன்னுடனேயே வாழ்ந்தேன். நன்றி உணர்ச்சியைக் கொன்று விட்டு, நீ எங்கோ சென்றுவிட்டாய்!

அரும்புப் பருவத்தில் நீ செய்த குறும்பு களுக்காகத் தண்டனையேற்றவன் நான். உன் அன்னை அடுப்பங்கரையில் வேலையாக இருந்த நேரத்தில் விழுந்து தவழ்ந்து, படியில் இடறி வீழ்ந்தாயே, அன்று உனக்காக நான் அடிபட்டேன். ஆனல் உன் தவறுக்குத் தண் டனை ஏற்ற என்னைப்பற்றிக் கொஞ்சம் கூடக் கவலை கொள்ளாமல் நீ உன் இச்சைப்படி திரிந் தாய், இன்றும் உன் இச்சைப்படியே என் னிடம் சொல்லாமல் கூட எங்கோ ஓடிவிட் டாய்!

முதன்முதலில் நாம் ஒன்ருகப் பழகும் பொழுது உனக்கு இருந்த இந்தப் 'பாரா முகம்' கொஞ்சம் கொஞ்சமாக மாறி நாளடை வில் நான்படும் துன்பங்களுக்காக, நீ என் னிடம் இரக்கம் காட்ட ஆரம்பித்தாய். என் பால் ஏற்பட்ட இந்த இரக்கம் நீண்டநாட்கள் நிலைத்து நிற்கவில்லையே, ஏன்? காலை அரும்பி, பகலில் காய்ந்து மாலையில் மடிந்துவிடும் மலர் போன்றுகூட இருக்கவில்லையே, அந்த இரக் கம்? அன்ருெருநாள் மாலை. பள்ளிக்கூட விளையாட்டு மைதானம். விளையாட்டில் வெற்றி பெற நினைத்தாய் நீ. நான் உன்னுடன் ஒத்து ழைத்தேன். முடிவில் வெற்றிகிட்டும் தருவா யில் பந்தை உதைக்கும் பாவனையில் என் வயிற்றில் பந்தால் உதைத்தான் எதிர்க்கட் சிக்காரன். என் துயரத்தைக்கண்டு நீ துடித்த துடிப்பு என்னைத் தவிர வேறு யாருக்குமே தெரியாது.

குற்றங்களை உன்மேல் மாத்திரம் அடுக்கிக் கொண்டு போகிறேனு? நான்மட்டும் என்ன குற்றமற்ற குணக்குன்ரு? இருந்தாலும், நான் தீயவழிக்குச் செல்லச் சிறிது தயங்குவேன், ஆனல் நீ கட்டளையிட்டால் அதை மீறும் துணிவு எனக்கு இருந்ததில்லை. இதனல் நானும் கெட்டு, நீயும் அல்லல்பட வேண்டிய நிலைபிறந்தது. எதையோ நினைத்தேன். எதையோ பேசுகிறேன். எழுதுகிறேன். எதிர் பாராத துயரத்தால் தாக்குண்ட மனம் இப்படித்தான் அங்கொன்றும், இங்கொன்றுமாக எதை எதையோ நினைத்து ஏங்குகிறது.

நீ இல்லாவிடில் நான்கூட இந்த உலகில் பிறந்து இப்படி அவதிப்பட்டிருக்கவே மாட் டேன். நீ இந்த உலகில் பிறந்த கதையே பெரும் கதைதான். நீ இந்த உலகத்திற்கு வரும்பொழுதே இருப்பவர்களுக்கு இன்னல் விளைவித்துக்கொண்டே அல்லவா வந்தாய். சொல்லப்போனல், உன் வருகையை இந்த உலகிற்கு அறிவித்தவனே நான்தான். உன்னைப் பெற்றவள் பிரசவவேதனையில் துடித்துக்கொண்டிருந்தாள். உன் அப்பா, அறைவாயிலில் குறுக்கும் நெடுக்குமாக ஓட வில்லை. அவர் நெஞ்சில் ஏற்பட்ட கலக்கம், கண்களில் கண்ணீராக வெளிவந்தது. தலைப்பிரசவம் 'பெத்துப்பெருகி' நல்லபடியாக வந்து சேரவேண்டும் என்று உன் பாட்டி கவலையுடன் வீட்டுத்தெய்வத்தை வழிபட்டுக் கொண்டபோது சொன்னவார்த்தைகள் எங் கிருந்தோ ஓடிவந்து அவர் காதுகளில் புகுந்து கொண்டன. இந்த நேரத்தில் உன் தாய் போட்ட கூச்சல் மருத்துவமனையையே கிடுகிடுக்க வைத்தது. உன் அப்பா, இரு காதுகளையும் பொத்திக்கொண்டார். ஆனல், அவர்...நெஞ்சம்...பொத்துவாரின்றிப் பொரு மிக்கொண்டிருந்தது.

சுகப்பிரசவம் அல்ல. ஆயுதக்கேஸ்தான். ஆனல் உனக்கோ, உன் தாய்க்கோ தீங்கு எதுவும் நேராமல் மருத்துவர் காப்பாற்றினர். உன் குழந்தைப் பருவத்தில் செல்லமாகவே வளர்ந்தாய். 'தலைச்சன் பிள்ளை' என்ற கார ணத்தால் நீ அனுபவித்த சுதந்திரம் கட்டுக் கடங்காதது. ஆனல் அதேநிலை உன்னைப் பிடிவாதக்காரனுக ஆக்கி, உன் பிற்கால வாழ் விற்கு நஞ்சாக இருந்ததை நினைத்தால் நான் செயலிழந்து மரமாகி விடுகிறேன். சிலசமயங் கவில்.

உன் பள்ளிப்படிப்பு முடிந்து கல்லூரி வாழ்வு தொடங்கும்பொழுதுதான் உன் குடும் பத்தில் துன்பம் புகுந்து, குடிகொண்டிருந்த இன்பத்தையும் அமைதியையும் எங்கோ விரட்டிவிட்டு, என்றென்றும் தீராத சோகக் கடலில் உங்கள் குடும்பத்தாரை ஆழ்த்தியது. ஆம்! வாணிபத்தில் எதிர்பாராமல் ஏற்பட்ட அந்த நஷ்டத்தையும் அதனல் பொருளிழந்து உன் தகப்பனர் பட்ட அந்தக்கஷ்டத்தையும் தான் சொல்லுகிறேன். வியாபாரம் நொடித் துப்போயிற்று, கடன்காரர்களின் தொல்லை, பெருகியது. நினைவு தெரிந்தநாள் முதல் இன் பத்தையும் மகிழ்ச்சியையும்மட்டும் சுவைத்தி ருப்பவர்கள். திடீரென்று ஒருநாள் எதிர்பாரா மல், ஏற்பட்ட சீரழிவில் துன்பமும் துயரமும் அடைந்தால் அவர்கள் நிலைமை மிகவும் இரங்கத்தக்கதுதான். பிறந்தது முதல் இன் னலும் இடர்ப்பாடும் கண்டு வாழ்ந்தவர்கள் அதைப்பற்றிக் கவலையே கொள்வதில்லை வள மாகவாழ்ந்தவர்கள், வறுமையின் நிழலைக் கூடக் கண்டறியாதவர்கள், வறுமைப்பிடியி லேயே சிக்கினல்...சிதைந்து சின்னபின்ன மாகவேண்டியதுதான். உன் குடும்பமும் அப் படித்தான் போயிற்று. உன் அப்பா கடன் காரர் தொல்லை தாளாமல், அதே கவலையால் கரைந்து, நோய்வாய்ப்பட்டு இறந்தார். உன் தாய் எங்காவது அன்றுடம் வேலைகிடைத் தால் உழைத்து, கூலி வாங்கி வாழ்க்கை நடத்துகிருள். வேலை இல்லாவிட்டால் பட்டினி.

கல்லூரிப்படிப்பை நிறுத்திவிட்டு வேலைக் காக நீ தேடினுய். நானும் உன்னுடன் எவ் வளவோ ஒத்துழைத்தேன். உன்னுடன் வருவதற்கு வாகன வசதிகள் எதுவும் கேட்க வில்லை நடந்து வந்தேன். எத்தனையோ படிக் கட்டுகள், மாடிகள் பெரிய மனிதர்களின் வீடுகள் இவற்றில் ஏறிஇறங்கினேன். உனக் காக நான் பட்ட துன்பத்திற்குப்பயன் இருந்திருந்தால் என் துன்பம் துடைபட்டி ருக்கும். பாவம்! எனக்கும் வேலைகிடைக்க வில்லை. உறவினர்களைப்பற்றியோ கேட்க வேண்டாம். பணம் காசு இருக்கும்பொழுது பசைபோல் ஒட்டிக் கொண்டிருந்தவர்கள் உங்கள் சீரழிந்த நிலையைக்கண்டு எட்டிப் போனர்கள். நண்பர்களில் அட்டை மனப் பான்மை கொண்ட பலரும் உன்னைக்கண்டும் காணுதவர்களாயினர், ஒரு சிலர் உன் நிலை கண்டு இரங்கினர், அதற்குமேல் அவர் களால் எதுவும் செய்ய முடியாத காரணத் தால்-ஒரிருவர் அவ்வப்போது உதவி செய் தனர். ஆனல் எத்தனை நாளைக்கு...

மூளை உழைப்புத்தான் தேவை, அலுவ லகத்தில்தான் வேலை பார்ப்பேன் என்ற பிடி 'வாதத்தைக் குறைத்து, கூலிவேலை எங்கா வது நிரந்தர வருவாயுடன் கிடைத்தால் போதும் என்ற நிலைக்கு வந்தாய். இருந்தும் வேலைக்காக நீபட்ட துன்பம் கொஞ்சம்நஞ்சம் அல்ல. வாழத்தான் முடியவில்லையே, செத் தால் என்ன என்ற கேள்வி உன் உள்ளத்தில் எழுந்து அடிக்கடி ஆர்ப்பரித்துக்கொண் டிருந்தது. வாழ்க்கையில் வெறுப்புற்றவர் களும், முற்றும் துறந்ததாகக் கூறி, வீடுபெற வழிபடுவதாகக் கூறும் முனிவர்களுக்குமே இந்த உலகம். அதுதரும் இன்பம் இவற்றைப் பிரிந்து செல்வதென்ருல் முடியவில்லையே. உன்னல் எங்கே முடியப் போகிறது என்று தான் முதலில் நினைத்தேன்.

உனக்கு வாழவேண்டும் என்ற எண்ணம் இருந்தது. 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்று உன் உள்ளத்தினின்றும் வார்த்தைகள் ஒலிபெருக்கிபோல் ஓலமிட்டுக்கொண்டிருந் தன. வாழ வேண்டும் என்ற ஆசை உள்ளத் திலும், உழைத்து வாழ தெம்பும் திராணியும் இருந்தது. இருந்தும் உன்னல் வாழ முடிய வில்லை. உன் உழைப்பைப் பயன்படுத்தி உயிர்வாழ தேவையான உணவும் மற்றவை யும் பெற இரண்டு வழிகள்தான் ஒன்று, உன் னிடம் கொஞ்சமாவது முதல் தேவை. அது பண உருவத்தில், அல்லது, வயல், மனை, இயந்திரம் வாகனம் போன்ற வேறு எந்த

உருவத்திலாவது அன்றாடத் தேவைக்கு வேண்டுவதை அளிக்கவல்லதாய் பணம் தரும் விதத்தில் இருக்கவேண்டும்- அது உன்னிடம் இல்லை. இருந்தகாலம் ஒன்று இருந்தது. ஆனல் அந்த வளம், வற்றி வரண்டு போய்விட்டது. அதை நினைத்துப் பயனில்லை. அடுத்த வழி. உன் உழைப்பைப் பெற்று உனக்குத் தேவைக்கு வேண்டியதை பிறர் கொடுக்கலாம். அந்தப் 'பிறர்' இருக்கிருர்களே அவர்கள் வாழ்வுதான் இன்று வளம்பெற்றிருக்கிறது. உன்னைப் போன்றவர்களின் உழைப்பைப் பெற்று, அதற்குப் பதிலாக உனக்குத் தேவையானவற்றைக் கொடுக்க அவர்கள் ஒருப்படுவதில்லை. இன்று மாத்திரம் அல்ல. உலகில் அந்தப் பிறர்' பரம்பரை தோன்றிய காலத்திலிருந்து அவர்களின் வழக்கம் உயிர்வாழ மன்றுடும் உன் போன்றவர்களின் உழைப்பை உறிஞ்சிக் கொண்டு சாறு எடுத்த சக்கையாக உன் இனத்தை விட்டுவிடுவார்கள். என்றைக் காவது ஒருநாள் உன் இனம் திடீரென்று விழித்தெழுந்து எதிர்த்துக் கிளர்ச்சி செய்தால் முதலில் தங்கள் திருட்டுக் கண்களை உருட்டிக் காட்டி உரத்த குரலில் மிரட்டுவர். உன் இனத்தவரின் உறுதி நீடித்தால் சிறிது சலுகை காட்டுவர். இப்படியாக உன் இனத்தவரின் வாழ்வே பெரும் போராட்டம்தான். நீயாவது பிறந்து, வளர்ந்து வயதடையும் வரையில் இன்னல் இன்னதென்று தெரியாது இன்பம் பண்பாட, மகிழ்ச்சி வாழ்த்துக்கூற வாழ்ந்தாய் மற்றவர்களோ இன்பம் என்ருல் எந்தக் கம்பெனி என்றும் 'மகிழ்ச்சி' என்ருல் அங்கு ஆள் எடுக்கிருர்களா என்றும் கேட்பவர்கள் தான்.

அரசாள்வோர் நாட்டுமக்கள் நலனில் நாட்டம் கொண்டவர்களாக இருந்தால், கிடைத்தற்கரிய மக்கள் சக்தி பாழ்படாமல், அதைப் பயன்படுத்திக்கொண்டு, மக்கள் தேவைக்குத் தக்கவைகளைக் கூலி மூலம் கொடுக்கலாம். ஆட்சியாளர்களுக்கு அந்த எண்ணம் தோன்றுவதற்கு உரிய அறிகுறி கூடக் காணுமே?

'என்னை வாழவிடாத இந்த வையத்தில் வருந்துவதைவிட, இறந்து விடுகிறேன்' என்று கூறிச் சென்றுவிட்டாய், நீ. 'உன்னை வாழவும் விடமாட்டேன்; சாகவும் விடமாட்டேன்; நீ, வதைபடத்தான் வேண்டும் என்று இந்த நாட்டுச்சட்டம் உன்னைப்பிடித்துச் சில்காலம் சிறையிலிட்டு அனுப்பியிருக்கும், உன்னைத் தற்கொலை செய்யும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும்பொழுது பிடித்திருந்தால். நல்லகாலம்! நீ, தப்பிவிட்டாய். அரசாங்கத்து ஆணை உன்னை விடமாட்டேன் என்று தடுக்கு முன் நீ தப்பிவிட்டாய். நான் தவிக்கிறேன்.

பசி, வறுமை, பிணி, கொடுங்கோலாட்சி முதலாய மனித இனத்தின் விரோதிகள் இல்லாத இன்ப உலகிற்கு நீ, சென்றுவிட்டாய். வஞ்சக மனிதர்கள் வாழும் வையத்திலிருந்து நீ பறந்துவிட்டாய். நான் தனியே சிக்கித் தவிக்கிறேன். ஆனல் நான் படும் துன்பத்திலும் ஒரு சிறு துளி இன்பம் இருக்கத்தான் செய்கிறது. நான் நன்ருக இருந்த காலத்தில் உனக்கும் பிறருக்கும் பயன்படாமல் இருந்தேன். நலிந்து, நைந்துகிடக்கும் இந்த வேளையில் புழு, பூச்சிகளுக்கு இரையாக இந்த நிலையிலாவது பயன்படுகிறேனே, என்ற அந்த ஒரே எண்ணம்தான்.

உன்னை நினைந்து உருகும்.

உடல்.

★





10-பக்கத் தொடர்ச்சி)

நடராசன் சொன்ன கணக்கைப் பார்த்தால், இது சாத்தியமா என்று கூடத் தோன்றும். அதற்கு முதல்நாள் காலை 4-30 மணிக்குப் படுத்தாராம். அதற்கு முதல் நாள் 5 மணி! அவ்வளவுக்கும் பகலில்கூட அதிகநேரம் தூங்க முடிவதில்லையாம்! "அண்ணா அவர்களே இரவு பகலாகக் கண்விழித்ததால் காரியங்கள் இவ்வளவு விரைவாக வந்தன. அவர் மேற்பார்வை பார்த்தது மட்டுமல்ல, முதல் தடவை அவர்தான் கடப்பாரையைப் பிடித்துக் குழிபோட்டுக் காண்பித்தார். தினம் காலையில் எழும்பொழுது ,அவருடைய காலிலிருந்து குறைந்தது பத்து முட்களாவது எடுக்கப்பட வேண்டியிருக்கும்'' என்று தோழர் நடராசன் சொன்னர். அண்ணா! விசித்திரமான மனிதர்மட்டுமல்ல. விசித்திரமான தலைவர்கூட அல்லவா? வேறு எந்தக் கட்சித் தலைவர் இவ்வளவு பாடுபட வேண்டியிருக்கிறது. மாநாடு என்ருல் ஏர் கண்டிசண்டு இரயிலில் வருவார்கள். இறங்கியதும் ராஜபவனத்துக்கோ, ரோஜா மாளிகைக்கோ நேராகச் செல்வார்கள். காஷ்மீரக்கம்பளங்கள் அவர் காலடி நோகாவண்ணம் அங்குவிரிக்கப்பட்டிருக்கும். பலவகைப் பண்டங்களும் பழரசமும் மிகுந்த விருந்துகள், நேரம் போக நடனக் கச்சேரிகள், அவர்கள் தங்கியிருக்கும் பவனில் நடைபெறும். காலையில் பத்துகார்கள் முன்னே பாதுகாப்பாகச் செல்ல, மாநாட்டுக்கு அந்தத் ,தலைவர்கள் செல்வார்கள். மாநாட்டுக்குப் போகும் வழியில், கோகில கானம் பயிலும் கோமளவல்லியிருந்தால், அங்கு காரில் இரண்டு மூன்று மைல் வந்த களைப்பைப் போக்கிக்கொள்ள இசை கேட்டு விட்டு, மாநாட்டுக்கு விரைந்து செல்வார்கள்! மாநாடு ஆரம்பித்த பின் வருவார்கள், மாநாடு முடிவதற்கு முன் வெளியேறி விடுவார்கள்! அவர்கள் பெரிய இடத்துத் தலைவர்கள்! ஆனல் நமது தலைவரோ, மாநாடு கூட்டுவதற்கு, கல்லிலும், முள்ளிலும் இடறி வெய்யிலில் நின்று, இரவு முழுவதும் கண்விழித்துப் பாடுபடுகிருர்! ஒருபுறம், அறிஞர் அண்ணாவிலிருந்து கடைசித் தொண்டர் வரை பாடுபட்டால்தான் காரியத்தை முடிக்க முடிகிறது என்ற நிலை—பணத்தில் காணப்படும் குறைவை உழைக்கும் ஆட்களின் எண்ணிக்கையால் சமன்செய்யமுயலும் நிலை—"இதில் ஆயிரம் ரூபாய் ஆகிவிட்டால் என்ன செய்வது? அந்தக் காரியத்தை நாமே மேற்கொண்டால் ஒருநூறு ரூபாய் குறையாதா?'' என்று செலவுக்குச் செலவு கணக்கிடும் தன்மை—பொதுவாக வசதிகளற்ற நிலையில் ஏற்றுக்கொள்ளும் பெரும் பொறுப்புகள்—இவற்றை நினைக்கும்பொழுது ஒருபுறம் சோகம் தலைதூக்கினுலும், மறுபுறம் அறிஞர் அண்ணாவைப் பார்க்கும்பொழுது நம்பிக்கையும், பூரிப்பும் எழுகின்றன. இத்தகைய மாபெரும் தலைவரை "சாமான்யர்களின்'' தலைவரைப்பெற்றுள்ள நாம் ஏன் கவலைப்பட வேண்டும்! "தம்பியுடையான் படைக்கஞ்சான்!'' என்று அவர் சொல்லிக்கொண்டு நமக்குத்தைரியத்தைத் தருகிருர், அதை விடப் பன்மடங்கு அதிகமாக, "இவரைப் போன்ற அண்ணனுடையான் அவனியில் எதற்கும் அஞ்சான்!'' என்று நாம் சொல்லிக் கொள்ளலாமல்லவா? மாளிகையில் உலவி விட்டு, மாநாட்டு நேரத்துக்கு வந்திறங்கும் பெரிய மனிதரல்ல அண்ணா! மக்களின் தலைவர், மக்கள் கூட்டத்திலிருந்து வந்தவர், எனவே மக்களின் நிலை அவருக்குத்தெரிந்த தொன்று! மாநாடு என்றதும் அதை நடத்திடும் பெரும் பொறுப்பை அறிஞர் அண்ணா தாமாகவே ஏற்றுக்கொண்டார்! மாபெரும் இயக்கத்தை உண்டாக்கியவர்; ஒரு மாபெரும் மாநாட்டை நடத்தியும் காட்டினர்! அரசாங்க ஒத்துழைப்பின்றி, மாருக அரசாங்கம் தரும் சிறுசிறு தொல்லைகளைத் தாங்கி, இவ்வளவு பெரும் மாநாட்டை, தமிழ்நாட்டில் இதற்கு முன் வேறுயாரும் நடத்திக்காட்டியிருக்க முடியாது!

"எங்கும் இன்பமே"



இசைப்புலவரின் இனிய கானம்.

தலைமை நிலையத்தில் அண்ணா இருந்தார் என்பதைச் சொல்லப்போய் இவ்வளவும் வந்ததல்லவா? பொதுக்குழுக்கூட்டம் மெயின்காட் கேட் என்பதற்கருகில் ஒரு கட்டிடத்தில்கூட்டப்பட்டிருந்தது. பொதுக்குழு தோழர்களெல்லோரும் வெளியில் கூட்டமாகத் தேங்கியிருந்தார்கள். அண்ணா அவர்கள் மணி 9-30க்கு வந்தார்கள். முதலில் செயற்குழுக் கூட்டம் நடைபெற்றது. அது முடிந்ததும், பொதுக்குழு கூட்டம் ஆரம்பமானது. பத்திரிகை நிருபர்கள் உள்ளே அனுமதிக்கப்படவில்லை.

பொதுக்குழு கூட்டத்தில் கலந்துகொள்ள முடியாத தோழர்களும் நிருபர்களும் திருச்சி முனிசிபல் கட்டிடத்தின்முன் காத்திருந்தோம். அங்கு கழகப்பொதுச்செயலாளருக்கு நகரசபை வரவேற்பளிப்பதாக இருந்தது. நிருபர்களுக்குத் தனியாக இடம் ஒதுக்கப்பட்டிருந்தபோதிலும் கூட்ட நெருக்கடியால் அந்த இடத்தில் என்னால் இருக்கமுடியவில்லை. உள்ளேபோக முடியாமல் எங்களுடன் இருந்த முனிசிபல் அதிகாரி ஒருவர் சொன்னார். "இதுதான் முதல்தடவை, திருச்சி நகரசபையில் அரசியல் தலைவரென்ற முறையில் அளிக்கப்படும் வரவேற்பு இதுதான் முதல்தடவையாகும்."

எங்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. எவ்வளவு பேர்களுக்கு நகரசபை வரவேற்புகள் அளித்திருக்கிறதே!" என்றோம்.

"மந்திரிகள், அரசாங்க உயர்பதவியினர், சமயாச்சாரியார்கள், சமூகத்துறையில் ஈடுபட்டவர்கள் பலருக்கு அளித்திருக்கிறது. ஆனால் பதவியிலில்லாத அரசியல் தலைவருக்கு வெளிப்படையாகக் கொடுக்கப்பட்ட வரவேற்பு இதுதான்!" அவர் மின்சார இலாகாவைச் சேர்ந்தவர்போலும், உள்ளே ஏதோ அலுவலாகப்போய்விட்டார். திராவிட முன்னேற்றக் கழகத்திற்குக் கிடைத்துள்ள பெருமை குறித்து நாங்கள் மகிழ்ந்தோம்.

பொதுச்செயலாளர் வந்ததும், நகரசபைத் தலைவர் டாக்டர் மதுரம் அவர்கள் வரவேற்பளித்தார்கள். பொதுச்செயலாளர் பதிலுடன் கூட்டம் கலைந்தது.

## "இசை வெள்ளம்"

நாதசுர மன்னர் ராசரத்தினம்.

நகரசபை வரவேற்பு முடிந்ததும், அங்கிருந்து கூட்டத்தில் பெரும்பகுதி மாநாட்டுப் பந்தலுக்குச் சென்றது. பந்தல் முழுவதும் விளக்குகள்—இரண்டாயிரம், மூவாயிரம் நீள விளக்குகள் பிரகாசித்தன. வேலைகள் அநேகமாக முடிந்து, ஒழுங்குபடுத்தும்படியான நிலையில் இருந்தனர். பந்தலில் மூலைக்கு மூலை, கூட்டங்கள் கூடியிருந்தன. இந்தச் சமயத்தில் காற்று மிகப் பலமாக வீச ஆரம்பித்தது! காற்று என்றால் புழுதியுடன் கூடிய காற்று! அது வீசும் வேகத்தில் பந்தல் ஆடிக்கொண்டிருந்தது. காற்றுடன் மழையும் ஆரம்பித்தது! காற்று அதிகமாக இருந்தால் மழை அதிகநேரம் நிற்கவில்லை, காற்றுமட்டும் புழுதியைத் தூவியபடி இருந்தது! வெய்யிலை மறைத்து நிழலைத் தருவதற்காகப் போடப்பட்ட பந்தல்! பலமான காற்றுக்குமுன் என்ன செய்யும்? காற்று அடித்தால் குடை மேலே எழுந்து அழுந்துமல்லவா? அதைப்போல பந்தல் சில இடங்களில் சற்று உயர்ந்து, பின் தாழ்ந்துகொண்டிருந்தது. காற்று அடித்த வேகத்தில் முதலில் வைக்கப்பட்டிருந்த வாயிலின் மேலிருந்த ஒரு சிறு மாடம் கீழே விழுந்துவிட்டது! இன்னுங் கொஞ்சம் வேகமாக அடித்திருந்தால் வாயில் முழுவதும் விழுந்திருக்கும்! காற்று அந்தஅளவுடன் நின்றது. தலைக்கு வந்தது தலைப்பாகையுடன் போயது என்பதைப்போல, முதல்வாயிலில் ஏற்பட்ட சிறு சிதைவைத் தவிர வேறு சேதம் எதுவும் கிடையாது. வாயிலை அலங்காரஞ் செய்துகொண்டிருந்தவர்கள் மிக சாமர்த்தியத்துடன், விழுந்ததற்கு இணையாக இருந்த மற்றொரு மாடத்தையும் கீழே கொண்டுவந்து விட்டார்கள். வாயிலின் இருந்த பொலிவு குறையாமற் காப்பாற்றப்பட்டது.

மின்சார விளக்குகளின் வரிசை நீண்டுகொண்டே போனது. ஒலிபெருக்கி இசைத்



தட்டுகளை நகர்த்திக்கொண்டிருந்தது. மறுநாள் மாநாடு என்பதற்கான பரபரப்புக்காணப்பட்டது.

மாநாட்டுக்காக அமர்த்தப்பட்ட ஐந்து வாடகைக்கார்களும் பந்தலுக்குள் வந்து போய்க்கொண்டிருந்தன. தோழர்கள் மணி, பராங்குசம், முத்து முதலானவர்கள் சுழன்று திரிந்தபடி இருந்தார்கள். நான் ஒரு மணற்றிட்டில் உட்கார்ந்திருந்தேன். அம்பிலும், திராவிடப்பண்ணையும் வந்தார்கள்.

"என்ன..." அதற்குமேல் அம்பிலால் சரியாகப்பேசமுடியவில்லை. அவருக்குத் தொண்டைக்கட்டிக்கொண்டிருந்தது.

"என்ன தனியாக உட்கார்ந்திருக்கிறீர்கள்?" என்று திராவிடப்பண்ணை முத்துக்கிருட்டிணன் கேட்டார், மங்கிய குரலில்! சாதாரண காலத்திலேயே அவருடைய குரல் கீச்சுக்குரலாக இருக்கும். அதுவும் மாநாட்டு வேலையில் இன்னுங் கம்மி இருந்தது.

"நீங்கள் போகும்பொழுது என்னை இரயிலடி அருகில் விட்டுப்போகிறீர்களா?"

"அண்ணாவைத் தேடிப்போகிறோம். வழியில் இறக்கிவிடுகிறோம்."

காரில் எனக்கும் என்னுடனிருந்த மற்றும் இரண்டு பேர்களுக்கும் இடம் கிடைத்தது.

மாநாட்டில் பொறுப்பேற்று வேலை செய்தவர்க்கெல்லாம் அன்று இரவு பூராவும் தூக்கம் இருந்திருக்காது.

17ந் தேதி காலையில் வெகு சீக்கிரமாகவே நாங்கள் எழுந்துவிட்டோம், கூட்டம் அதிகமாக இருக்குமாதலால் எல்லாக்காரியங்களையும் சீக்கிரம் முடித்துவிடவேண்டுமென்று! எழுந்ததும், எங்களிடத்திற்கு அருகாமையிலிருந்த காவிரிக்குப்போனோம். ஆனால் எங்களுக்கு முன்னால் கூட்டம் அதிகமாக இருந்தது. ஆற்று மணலில் சிறிது தூரம் நடந்து சென்று குளித்துவிட்டுத் திரும்பி நடந்து வந்தோம். ஆற்றுப்பரப்பில் கூட்டங்கூட்டமாக சிதறியிருந்தார்கள். சிலர் குளித்துக்கொண்டும், சிலர் உடைகளை உலர்த்திக்கொண்டும், சிலர் மணலில் அமர்ந்து பேசிக்கொண்டும் இருந்தார்கள். முதலில் நாங்கள் ஆற்றில் இறங்கியபொழுது அங்கொன்றும் இங்கொன்றுமாக கொடிக்கம்புகள் நடப்பட்டிருந்தன. யாருடைய முயற்சி வேலைசெய்ததோ தெரியவில்லை, நாங்கள் திரும்பிடும்பொழுது, கொடிகள் வரிசையாக, ஒழுங்காக இடம் விட்டு, நடப்பட்டிருந்தன. அதுமட்டுமல்லாமல் இரண்டு பக்கத்திலும் இரண்டு தோழர்கள் நின்றுகொண்டு, புதிதாக வருபவர்களை அழைத்து, அவர்களிடம் கொடியிருந்தால், குறிப்பிட்ட இடத்தில் நடச்சொல்லி மேற்பார்வையிட்டார்கள். அரசர்கள் படையெடுத்துப்பாசறை அமைத்தாலொத்து அந்த கொடிகளின் வரிசை காட்சியளித்தது. அதிலும் வெண்மணற் பரப்பில், கருப்பும் சிவப்பும் மிகத் தெளிவாகக் காட்சியளித்தன.

ஓட்டலுக்குப்போனதும், மக்கள் கூட்டம் அதிகமாகிவிட்டது என்பது நன்றாகத்தெரிந்தது. உள்நுழையும்பொழுது எங்கள் கூட்டத்திலிருந்தவர் "இப்பொழுது நன்றாகச் சாப்பிட்டுவிட்டு போகவேண்டும். ஊர்வலத்தில் கலந்துகொண்டு போகும்பொழுது பசித்தால் ஏதும் கிடைக்காது!" என்று முன்னெச்சரிக்கையாகச்சொன்னார். அவர் சொல்வதென்ன, குளித்துவிட்டு நடந்துவந்ததே பசி வயிற்றைக் கிண்டிக்கொண்டிருந்தது!

"இட்லி, வடை"

"ஆறுபேருக்குமா?"

"ஆமாம்?"

"சட்டினியா? சாம்பாரா?"

"சாம்பார்!"

பரிமாறுவர் ஆறு தம்ளர் தண்ணீரைக் கொண்டுவந்து வைத்துவிட்டுப் போனார்,

## "மோட்டார் மன்னரும் வந்தாரையா"

வில்லுப்பாட்டில் நகைச்சுவை மன்னர்.

போனவர் அவ்வளவுதான்! அரைமணிநேரம் வரைத் தலை நீட்டவேயில்லை. அதற்குள் ஆறு தம்ளர்களும் காலியாகிவிட்டன. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தோம்.

மற்றொருவர் வந்தார், அவர்தான் அந்த ஓட்டல் முதலாளி. "உங்களுக்கு என்ன வேண்டும்?"

அந்தக்கேள்வி எங்களிடம் எவ்வளவு கோபத்தை உண்டாக்கியிருக்கும்?

"இட்லிக்குச்சொல்லி அரைமணிநேரம் ஆகிறது. இன்னும் வரவில்லை."

அவர் மிக அமைதியுடன் "இட்லி ஆகிவிட்டது!" என்றார்.

"இட்லி இல்லையென்றால், தோசை தாருங்கள்!"

"தோசைவர இன்னும் அரைமணிநேரம் ஆகும்! பூரி தரச்சொல்லட்டுமா?"

சரியென்று தலையசைத்தோம். பதினைந்து நிமிடங்கள் கழித்து, ஆறு தட்டுகள் வந்தன. அவற்றில் பூரிகள் இருந்தன, பூரிகள்மட்டும் இருந்தன! தொட்டுக்கொள்வதற்கு வேறு இல்லை.

"உருளைக்கிழங்கு?" என்று கேட்பதற்குள், பரிமாறுபவன் சற்றுப்பணிவுடன் "ஆகிவிட்டது. சாம்பார் போடட்டுமா?" என்று கேட்டான்.

பேச்சை வளர்த்தால், அதுவும் ஆகிவிடும் என்ற எண்ணம் வந்து உடனே கொண்டு வரச்செய்தோம்.

காப்பி கிடையாது, பால் கொண்டுவர ஆள் போயிருக்கிறாம். சரியென்று நாங்கள் வெளிவந்து, சோடா, கலர் சாப்பிட்டுவிட்டு சிந்தாமணிக்குப்போனோம், ஊர்வலம் ஆரம்பிக்குமிடத்திற்கு!

நாங்கள் போவதற்குள் ஊர்வலம் ஆரம்பித்து வந்துகொண்டிருந்தது. முதலில் தொண்டர் படைத்தலைவர் செரிப் அவர்கள் குதிரைமீது காணப்பட்டார். இரண்டாவதாக அலங்கரிக்கப்பட்ட யானை வந்தது!

[illegible] இருந்த "தமிழஜயா" [illegible] "[illegible] ஐயா!" என்றதும் வயதானவர் என்று நினைத்துவிடவேண்டாம். முப்பது வயது தானிருக்கும், தமிழ்ப்புலவர் பயின்று, இப்பொழுது சென்னையில் வேலைபார்க்கிறார். அவரைப்பார்க்கும்பொழுது "தமிழ் ஐயா என்ன சொல்கிறார்!" என்று நாங்கள் வேடிக்கையாக கேட்பது வழக்கம். அவர் ஊர்வலத்தைப்பார்த்துச் "சரியில்லை 'யென்று சொன்னதும் "ஏன்?" என்று கேட்டேன்.

"யானைப்படைக்குமுன் குதிரைப்படை வரலாமா?"

எனக்கு என்ன தெரியும்? படங்களில் யானைப்படை, குதிரைப்படைகளைப் பார்த்ததல்லாமல் எந்தப்படை முதலில் வரவேண்டுமென்பது யாருக்குத்தெரியும்?

தமிழ் ஐயா விடவில்லை. "யானைப்படைதான் முதலில் வரவேண்டும். பின்னால் குதிரைப்படை, அதற்குப்பின் தேர்ப்படை, காலாட்படை. இதுதான் தமிழ் மன்னர்கள் வலம் வருகிற முறை. புறநானூற்றில்கூட பெயர்களைச் சொல்லும்பொழுது,

"கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய
கடுமாவும்
நெடுங்கொடிய நிமிர்நேரம் நெஞ்சுடைய
புகன் மறவரும்"

என்று யானை, குதிரை, தேர், மறவர் படைகள் வரிசையாக வைக்கப்படுகின்றன. யானை இருக்கிறது, குதிரை இருக்கிறது, தேருக்குப்பதில் கார் இருக்கிறது, மறவர்கள் இருக்கிறார்கள், நாட்டின் மன்னர் வருவதைப்போல மாநாட்டின் தலைவர் வருகிறார். எல்லாம் நன்கு அமைந்திருக்கிறது. படையமைப்பில் யானைப்படையை முன்வைத்து, குதிரைப்படையைப் பின்னால் வரச்செய்யவேண்டும்.

வருவது ஒரு குதிரையும், ஒருயானையும்! பெரிய படையமைத்து, போர்க்கோலத்துடன் புறப்பட்டால் செய்யவேண்டிய அமைப்புகளை தமிழ்ப்புலவர் சொல்லிக்கொண்டிருந்தார்! அவருடைய ஆர்வம், செல்லும் ஊர்வலத்தை பழங்கால வீரப்படை யெழுச்சிகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கச்செய்தது.

முன்னால் சென்ற யானை நன்றாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. யானை நடை என்பார்களே அதைப்போலக் கம்பீரமான, உறுதியான [illegible] கொடியை வைத்துக் [illegible] உட்கார்ந்திருக்க, யானை அசைந்து அசைந்து வரும் காட்சி, பார்க்க இனிமையாகயிருந்தது.



போட்டோ எடுப்பவர்கள் யானைவைத்துப் படம்எடுத்தார்கள். நானும்ஒன்று எடுத்தேன். யானை அசைந்ததாலோ, அல்லது யானை அருகில் வந்துவிட்டதென்று கைநடுங்கியதாலோ. படத்தில் அசைவேற்பட்டுவிட்டது. எங்களைப்பின்னுக்குத் தள்ளிவிட்டு, ஒருவர் மிகத் தைரியத்துடன் முன்னால் போய் யானைக்கு எதிரில் நின்று படமெடுக்கப்போனார். இவர் சரிசெய்வதற்குள் யானை நகர்ந்துவந்தது. துதிக்கையை எதேச்சையாக வீசியது. இன்னும் கொஞ்சமிருந்தால் காமிரா வீசியெறியப்பட்டிருக்கும். படமெடுக்கும் தோழர் சாமர்த்தியமாகக் குனிந்து துதிக்கை வீச்சுக்கு உள்புகுந்து வெளியே வந்துவிட்டார்!

ஊர்வலமென்றால் இரண்டுமைல்நீளத்திற்கு ஒரு ஊர்வலம் மட்டுமல்ல; மூன்று ஊர்வலங்கள் வந்தன என்று கூறலாம். மத்தியில் ஒரு ஊர்வலம் வேகமாகநகர்ந்து கொண்டிருந்தது. அதற்கு இரண்டுபக்கங்களிலும் இரண்டு கூட்டங்கள் சற்றுதங்கி, வேடிக்கைபார்த்து நகர்ந்துகொண்டிருந்தன. ஊர்வலத்தில் கலைப்படைந்தவர்கள், அதிகச்சத்தமிட்டுக் குரல் கம்மியவர்கள் மத்திய ஊர்வலத்தை விட்டு ஓரத்திற்கு வந்துவிடுவார்கள். பின் சோடா, தண்ணீர் சாப்பிட்டுவிட்டு, மறுபடியும் மத்திய ஊர்வலத்துக்குள் சேர்ந்துகொள்வார்கள். அதற்குள் இவர் விட்டஇடம் இரண்டு மூன்று பர்லாங்கு தூரத்துக்குப்போயிருக்கும். போனாலென்ன? அதுதான் ஊர்வலம் மைல் கணக்கில் போய்க்கொண்டிருக்கின்றதே! கொஞ்சதூரம் பின்னால்தள்ளி அவர்களுடன் சேர்ந்துகொள்வார். இப்படி மூன்றுபிரிவுகளாக, மத்தியில் முக்கியமான படை, இரண்டு பக்கங்களிலும் துணைப்படைகள்! ஊர்வலம் சென்றது.

ஊர்வலம் செல்லும் வழிகளிலெல்லாம், வேடிக்கை பார்ப்பதற்கு மாடிகளிலும்,வீடுகளிலும், மதில்களிலும், வீட்டின்மேலும், உட்கார்ந்து ஏராளமானவர்கள் கூடியிருந்தார்கள். வீடுகளில் மேலிருந்து மலர்களைத் தூவி, வாழ்த்தினார்கள். மாநாட்டுத்தலைவருக்கும், திறப்பாளருக்கும், முக்கிய தோழர்களுக்கும் போடப்பட்ட மாலைகள் எண்ணிறந்தன.

இதற்குள்ளாக ஊர்வலம் மிக தூரம் நீண்டுவிட்டது. தெருவின் மத்தியில் நாங்கள் இருந்த பகுதி போய்க்கொண்டிருந்தது. [illegible] திரும்பிப்பார்த்தால், தலைவரின் கார் இன்னும் வரவில்லை. ஊர்வலத்தின் எந்தப்பகுதியில் இருக்கிறோம் என்பது புரியவில்லை. இப்படி போய்க்கொண்டிருந்தால் முடியாது என்று முடிவுசெய்து, நாங்கள் ஆறுபேர்களும் விரைவாக நடந்து, குறுக்கு வழிகளைக்கடந்து, வேகமாக மாநாட்டுக்கு வந்துசேர்ந்தோம்.

யானை, குதிரை, கொடிகள் தம்பட்ட சத்தம் வாழ்த்தொலிகள் வந்தன. "வள்ளுவர் நகர்" வளைவைத்தாண்டி, யானை நுழைந்தது. ஊர்வலத்தில் கலந்துகொள்ளாமல் பந்தலருகில் இருந்த கூட்டம் வழிநெடுக் குழுமியிருந்தது. குழல்கள் சத்தம் அதிகமாயின, வாழ்த்தொலிகள் அடர்ந்து கிளம்பின, குதூகலம்! பரபரப்பு! ஆரவாரம்! கழகக்கொடி தாங்கிய யானை முதல் வாயிலைக்கடந்து உள் நுழைந்தது. வழிவிலக்கிக்கொண்டு வந்த தொண்டர் படைத்தலைவர் குதிரையிலிருந்து இறங்கினார். பின் வரிசை வரிசையாகக் கழகக் கொடிகள், வளைவுகள், வந்தபடி இருந்தன, சுமார் அரைமணிநேரம் வந்துகொண்டேயிருந்தன. கடைசியாக, தலைவர், திறப்பாளர்கள் வீற்றிருந்த கார் வந்தது.

தலைவாயிலருகே அண்ணா, சம்பத், முத்து, மணி, அம்பில் பராங்குசம் முதலானோர் காத்துக்கொண்டிருந்தனர். அண்ணா அவர்கள் ஒரு மாலையை எடுத்துச்சென்று, தம் பிக்கு—மாநாட்டின் தலைவராகிய தோழர் நெடுஞ்செழியன் அவர்களுக்குச் சூட்டினார். அண்ணா தம்பியை வரவேற்கும் பாசம் புன்னகையுடன் அந்த வாசமலர் மாலையை அவர் போடும்பொழுது தெரிந்தது.

பொதுச்செயலாளர் கொடியை உயர்த்தினார். கொடி உயர்ந்தது, வாழ்த்தொலிகள் உயர்ந்தன. அத்துடன் காலை நிகழ்ச்சிகள் முடிவடைந்தன.

தலைவர்கள் பிரிந்து சென்றுகொண்டிருந்தார்கள். நான்போய் தோழர் என். வி. நடராசன் அவர்களைப்பார்த்து, "நிருபர்கள் டிக்கட் ஒன்று கொடுங்கள்!" என்று கேட்டுப் பெற்றுக்கொண்டேன். நிருபர்கள் டிக்கட் இல்லாவிட்டால் மேடைக்கு அருகில் போகவும், புகைப்படங்கள் எடுக்கவும் முடியாதாம்.

மாலையில் இன்னிசைக் கச்சேரிகள் இருந்தன. முதலில் நடிப்புப்புலவர் கே. ஆர். ராமசாமியின் பாட்டுத்தொடங்கியது. கச்சேரிகளில் வழக்கமாக வரும்முறையில் இராக [illegible] முறையில் அவர் பாடினார். பின் கீழிருப்பவர்கள் வேண்டுகோளுக்கு இணங்க, சினிமாப்

பாட்டுக்களை, "சொர்க்கவாசல்" படத்தில் பாடிய "எங்கே சொர்க்கம்," "கன்னித்தமிழ்ச் சாலையோரம்" "ராஜாமகள் ராணி" "ஆகும் நெறி எது?" முதலியவைகளை அவர் பாடினார். கைதட்டல் அதிகமிருந்தது, பின் "பாடமாட்டேன்" என்று ஒரு பாட்டை அவர் தொடங்கினார். பாடிக்கொண்டே "பாடமாட்டேன்" என்றால் எப்படியிருக்கும்! அடுத்த அடியில் "தமிழன்றி வேறு—பாடமாட்டேன்" என்று தொடர்ந்ததும் கைதட்டல் அதிர்ந்தது.

அடுத்தபடி நாதசுர மன்னர் திருவாவடுதுறை திரு. டி. என். இராசரத்தினம் அவர்களின் கச்சேரி ஆரம்பமானது, திரு. டி. என். ஆர். அவர்களின் திறமையைப்பற்றி அண்ணா அவர்கள் ஒருசமயம் குறிப்பிடும்பொழுது—திரு. வேதாசலம் வீட்டு விழாவில்—"மேலை நாடுகளில் ஒரு இசையைத் துண்டு துண்டுகளாக உடைத்து, நூறு நூற்றைம்பது பேர்கள் கையில் கொடுத்து பின் ஒன்று சேர்த்து இசையாக்க முயலுகிறார்கள். நமது திரு. டி. என். ஆர் அவர்களின் நாதசுரத்தைக்கேட்கும்பொழுது அதுவே, குழலாக, யாழாக, பிடிலாக, கஞ்சிராவாக, பலவித இசைவாத்யங்களாகமாறி ஒலிப்பதைக் கேட்கிறோம்'! என்று பாராட்டினார்கள். வழி வழி வந்த பண்டைத் தமிழர்களின் இசைக்கருவிகளில் ஒன்றை திரு. டி. என். இராசரத்தினம், அவர்கள், மிகச் சிறப்போடு, உயர்வோடு காத்துவருகின்றார். சென்னையில் திரு. வேதாசலம் வீட்டில் கச்சேரி முடிந்ததும், திரு. இராசரத்தினம் அவர்கள் தோழர் நெடுஞ்செழியன் அவர்களிடம், "மாநில மாநாடு எப்பொழுது!" என்று கேட்டார்.

"மே 17-லிருந்து நான்கு நாட்கள் !"

"நானும் வரப்போகிறேன் !"

"அவரும் வரவேண்டும் !"

"மாநாட்டில் நேரமிருந்தாலும் இல்லாவிட்டாலும் சரி, ஊர்வலத்தில் வந்து நின்று கொண்டாவது நான் ஊதாமல் போகமாட்டேன்" என்று பிடிவாதத்துடன் அவர் சொல்லிப் போனார். அதன்படி அவர் மாநாட்டில் கலந்துகொண்டு இன்னிசை தந்தார். திரு. இராசரத்தினம் அவர்கள் ஒரு இராகத்தை வைத்துக்கொண்டு இரண்டுமணி நேரம் மூன்றுமணிநேரம் என்று இழைத்துக்காட்டிப் புதுமைதரும் சிறந்த இசைமேதாவி! அவருடைய கச்சேரி மாநில மாநாட்டில் நேரமின்மை காரணமாகச் சீக்கிரத்தில் முடிவுற்றது. எங்களுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து இருந்து, இசையைச் சுவைத்துக்கொண்டிருந்த ஒருவர், "இன்னுஞ் சிறிது நேரம் நீடித்திருக்கலாமே" என்று அங்கலாயித்தார்.

வில்லுப்பாட்டுக்குத்தயாராக நகைச்சுவை மன்னர் என். எஸ். கிருஷ்ணன் காத்துக்கொண்டிருந்தார். அவர் ஆரம்பிப்பதாகக் குறிப்பிடப்பட்டிருந்த நேரம் வந்தது. ஆனால் திரு. இராசரத்தினம் கச்சேரி தாமதபட்டு ஆரம்பிக்கப்பட்டதால், நேரம் கடந்தும் முடியாமலிருந்தது. திரு. என். எஸ். கிருஷ்ணன் தன்னுடைய கடியாரத்தை எடுத்து திரு. இராசரத்தினம் முன்வைத்தார், நேரமாகிவிட்டது என்பதை உணர்த்த. திரு. இராசரத்தினம் நிறுத்துவதாயில்லை. என்னிடமும் கடியாரமிருக்கிறது என்று தன் கையைத் தொட்டுக் காண்பித்து, குழலை எடுத்து ஊதினார். அவருடைய கச்சேரி முடிந்ததும் வில்லுப்பாட்டு ஆரம்பமாயிற்று.

முதல் மாநில மாநாட்டில் "நான் கண்ட ரஷியா" என்பதைப்பற்றி நகைச்சுவை மன்னர் வில்லுப்பாட்டு பாடினார், இந்தத் தடவை, கொஞ்சம் இந்தியாவுக்குள் வந்து புத்தரைப்பற்றி வில்லுப்பாட்டுப் பாடினார். புத்தர் சரித்திரத்தைப்பேச்சாகவும், பாட்டாகவும் மாறி மாறிச் சொல்லி, வில்லைத்தட்டி, அடிக்கடி அவர் மக்களின் கைதட்டலைப் பெற்றார். "வில்லுப்பாட்டில் மகாவில்லன் தான்!" என்று அவரைக்குறிப்பிடும்படி அவர் கச்சேரி இருந்தது

(அடுத்த இதழில் முடியும்)

## மை ஆறு

அல்ஜீரியா நாட்டில் மை போன்ற கரிய நீருடையதாய் ஓராறு ஓடுகின்றது. அந்நீரைத் தொட்டு எழுதக்கூடிய வகையில் நீர் கனமுடையதாயிருக்கின்றது. மை சேர்க்க உதவும் பொருண்மை அந்நீரிற் கலந்துள்ளது. அந்த ஆற்றிற்கு இரண்டு ஊற்றுகளிலிருந்து நீர்பெருகி வருகிறது. ஓர் ஊற்றிலிருந்து வரும் நீர் அன்னபேதிச் சத்துடையது; மற்றோர் ஊற்றிலிருந்து வருவதோ கடுக்காய்ச் சத்துடையது; இதுவே "இங்கி" யென்னும் மை ஆறாக அந்த ஆறு இருப்பதற்குக்காரணம்போலும்.



# ★ வேதமார்க்கம்பற்றி புத்தர்! ★

ஒரு சமயம் இரண்டு பிராமண வேதாந்திகள் தங்களுக்குள் பலமாகச் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். சண்டையென்றால் வாய்ச் சண்டைதான். ஒருவரின் பெயர் வாசித்தன், மற்றவரின் பெயர் பாரத்வாசன். இருவருக்குள் ஏற்பட்ட சண்டை, பிரமாவை அடையக் கூடிய வழி என்ன என்பதாகும். பௌசுகார சாதி என்ற வேத சுலோகத்தை ஒப்பித்து, அதிலுள்ள வழியே பிரமாவை அடையச் செய்யும் என்று வாசித்தர் வாதிட்டார். பாரத்வாசன், தாருக்சியம் என்ற வேத சுலோகத்தை ஒப்பித்து, அதிலுள்ள வழிதான் பிரமாவை அடையச் செய்யும் என்று பேசினார். இவர்கள் மேற்கோள் காட்டிய இரு சுலோகங்களும் பிரமா ஒருவரால் அருளப்பட்டதாக நம்பிக்கை. இருந்தாலும் பிரமாவை அடைய இரண்டு வழிகள் கூறப்பட்டிருக்கின்றன, அவற்றில் எது சிறந்தது என்பதில் தர்க்கம்.

இந்த பிராமண வேதாந்திகள் பலமாக வாதிட்டுக் கொண்டிருக்கும்பொழுது, புத்தர் அந்தப் பக்கம் வந்தார். இருவரின் பேச்சுக்களைக் கேட்டபடி இருந்தார். மூன்றாவதாக ஒருவர் இருக்கிறாரென்பது, சண்டையிட்டுக் கொண்டிருக்கும் இருவரும் இவரிடம் வந்தார்கள். புத்தர் நடுநிலைமையாளராக இருந்தார். வாசித்தன் தனக்குச் சாதகமான வேத சுலோகங்களை ஒப்பித்தார், பாரத்வாசன் தனக்குத் தெரிந்த சுலோகங்களை மேற்கோள் காட்டினார்.

"இந்த ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குப் போக பல பாதைகள் இருக்கின்றன. அவற்றில் எது சிறந்தது, குறுகியது என்பது தெரிந்தால் அதன்படி போகலாம். அதைப் போல், இந்த உலகத்திலிருக்கும் ஆத்மா, பிரமாவை—பிரம்மத்தை அடைய பலவழிகள் வேதங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றில் எந்தவழி சிறந்தது என்பதுபற்றி எங்களுக்குள் விவாதம்" என்று இருவரும் சொன்னார்கள்.

"எது சிறந்த வழி என்பதற்குமுன், நீங்கள் சொல்லுகிறபடி உண்மையாகவே பிரம்மத்தை அடையப் பலவழிகள் இருப்பது உண்மை, வேதங்கள் சொல்லுகின்றன, அதைப்பற்றி விவாதமில்லை" என்று பிராமண வேதாந்திகள் சொன்னார்கள்.

"பிராமண சிரேஷ்டர்களே! இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லுங்கள். அடையவேண்டுமென்று வெகுவாகச் சொல்லுகிறீர்களே, அந்த பிரமாவை வேதத்தைப் படித்துணர்ந்த பிராமணர்களில் யாராவது நேருக்கு நேர் பார்த்திருக்கிறீர்களா?" என்று புத்தர் கேட்டார்.

பிராமணர்கள் திடுக்கிட்டார்கள். ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள். அடிப்படைக்கே ஆபத்தான கேள்வியல்லவா இவர் கேட்கிறார். இருந்தாலும் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லியாக வேண்டும்.

"இல்லை, வேதம் படித்தவர்கள் யாரும் பார்த்ததில்லை" என்று வாசித்தன் சொன்னான்.

"வேதம் படித்தவர்கள் போகட்டும், வேதங்களைச் சொல்லிக்கொடுக்கும் பிராமண ஆச்சாரிய சீலர்கள் அவர்களாவது பிரமாவை நேரில் பார்த்திருக்கிறார்களா?"

இவரை ஏன் நடுநிலைமையாளராக ஆக்கினோம் என்று அவர்களுக்கு ஆகிவிட்டது. "இல்லை!" என்று பாரத்வாசன் மங்கிய குரலில் சொன்னான்.

புத்தர் விடவில்லை, மேலும் கேட்டார். "அவர்கள் போகட்டும், வேதங்களைச் செய்ததாகச்சொல்லப்படும் முனிவர்களாவது பிரமாவை நேருக்குநேர் பார்த்திருப்பார்களென்று சொல்ல முடியுமா?"

"அப்படியும் சொல்ல முடியாது"

புத்தர் பின்வரும் சிறு சம்பவத்தைச் சொன்னார்.

"நான்கு தெருக்கள் கூடும் சந்தியில், ஒருவன் மாடிப்படிக்கட்டுகளை அமைத்துக் கொண்டிருந்தான். வேறு அமைப்புகள் எதுவுமில்லாமல், மாடிப்படிக்கட்டுகள் மாத்திரம் உயருவதைக்கண்ட மக்கள் ஆச்சரியத்துடன் அவனைக்கேட்டார்கள்: 'இந்தப்படிக்கட்டுகளை எதற்காக அமைக்கிறாய்?' என்று.

'மாளிகையின் முதல் மாடிக்குப்போக!'

'நான்கையா! ஆறு [illegible]

கிழக்கிலா, மேற்கிலா, வடக்கிலா, தெற்கிலா? மாளிகை எவ்வளவு பெரியது, எவ்வளவு உயரமானது, பார்க்க எப்படியிருக்கும்?'

மாடிக்கட்டிக்கொண்டிருப்பவன் 'எனக்குத் தெரியாது' என்றான்.

'மாளிகை ஒன்றுமில்லாமல், எதுவென்று தெரியாமல், படிக்கட்டுகளை மட்டும் நீ கட்டிக்கொண்டிருக்கிறாயா?'

'ஆமாம்!'

அவனைப்பார்த்து மக்கள் சிரித்தார்கள்."

புத்தர் தனது கதையை நிறுத்தினார். தாங்கள் கொண்டுவந்த வாதங்களை மறந்து

வாசித்தனும், பாரத்வாசனும் கதை கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

வாசித்தன் சிரித்தான் "மாளிகை எதுவும் இல்லாமல், மாடிப்படிக்கட்டுகள் கட்டுபவனைப் பார்த்து எல்லோரும் சிரிக்கத்தான் செய்வார்கள். அவனைப்போன்ற பைத்தியக்காரர்கள் இருந்திருக்கமாட்டார்கள்." பாரத்வாசன் அவனையொட்டிப்பேசினன்.

புத்தர், அவர்களின் சிரிப்பை அடக்கி. "பிரமாவையடைய வழியமைத்துவிட்டோம் என்று கூறிக்கொள்ளும் வேதாந்திகள், மாளிகை இல்லாமல் படிக்கட்டமைப்பவனின் நிலையில்தான் இருக்கிறார்கள். பிரமாவைப் பார்த்ததில்லை, பிரமாவைத்தெரியாது, இருந்தாலும் பிரமாவை அடையும் வழிகளைப்பற்றி நிச்சயமாகச்சொல்லுகிறார்கள்.

பிரமாவைப் பார்க்காதவர்கள், தெரியாதவர்கள், பெயர்மட்டும் கேட்டவர்கள், மற்றவர்களைப் பிரமாவிடம் அழைத்துப்போவதாக முன்வந்து நிற்கிறார்கள். குருடர்கள் ஒன்று கூடி வழிநடப்பதுபோலிருக்கிறது. முதலில் நடந்து செல்பவனுக்கு வழிதெரியாது, மத்தியில் நடந்து செல்பவனுக்கும் வழி தெரியாது, கடைசியில் நடந்து செல்பவனுக்கும் வழி தெரியாது. வேதப்பிராமணர்களின் பேச்சு குருடனின் பேச்சைப்போன்றிருக்கிறது. அது அர்த்தமற்றது, பயனற்றது, வெறும் போலிச் சொற்களின் தொகுப்பு!"

புத்தரின் பேச்சுக்குப் பதில்சொல்ல முடியாமல் இரண்டு பிராமண வேதாந்திகளும் தவித்தனர். ஆனால் உண்மைக்குமுன், அறிவுக்கு முன் அடங்கியிருக்கவேண்டியிருந்தது.

தம் அன்பு மார்க்கத்தைப் பரப்பிடும் பணியில் புத்தர் ஈடுபட்டிருந்த பொழுது, மாற்றார்கள்—வேத மார்க்கத்தினர் அவர்மீதும் அவர் கூட்டத்தினர் மீதும் இல்லாததும் பொல்லாததுமான பல பழிச்சொற்களை வீசினார்கள், தூற்றினார்கள், இகழ்ந்தார்கள். புத்தர் அவற்றை யெல்லாம் பொறுத்துக்கொண்டார். சிறிதுகூட வெறுப்போ, சலிப்போ இன்றி பணிபுரிந்தார்.

புத்தரின் கோபத்தைக் கிளர வேண்டுமென்ற எண்ணத்துடன் எதிர்தரப்பினர், முட்டாளும் போக்கிரியுமான ஒருவனைப் பிடித்து, புத்தரிடம்போய் அவரைத் திட்டிப் பேசும்படி அனுப்பினார்கள். போக்கிரியும், புத்தர் இருக்குமிடம் வந்து. வாயில் வந்தவாறு மிகத் தாழ்வான முறையில் புத்தரைத் தாக்கிப் பேசினன். புத்த சாதுக்களில் சிலர் துடித்தனர், மனம் நொந்தனர்: ஆனல் புத்தர் ஏதும் மறுமொழி தராமல், போக்கிரியைப் பார்த்துப் புன்னகை செய்தபடி இருந்தார்.

தனக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்டதை யெல்லாம் போக்கிரி பேசித்தீர்த்தான். புத்தர் எதற்கும் பதில் தராததால், அவனுக்கு அலுப்புத் தட்டியது. "ஏன் பதில் சொல்லாமல் இருக்கிறாய்?" என்று புத்தரைப் பார்த்துக் கோபத்துடன் அவன் கேட்டான்.

புத்தர் சிரித்தபடி அவன் அருகில் வந்து "ஒருவன் பரிசு ஒன்றை" மற்றொருவனுக்குக் கொடுக்க வருகிறான்; ஆனான் மற்றவன் அந்தப் பரிசை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டால், பரிசு யாருக்குச் சேருகிறது?" என்று கேட்டார்.

"இதிலென்ன கடினம்! கொடுக்க வந்தவன் பரிசைத் திரும்ப எடுத்துக் கொண்டு போவான்!" என்று போக்கிரி உடனே பதில் தந்தான்.

"அதைப்போல, மகனே! நீ இழிவு சொற்களை எனக்குத் தர வந்தாய். நான் அவற்றை ஏற்றுக்கொள்ளவில்லை. அதனல் அந்த இழிவு சொற்கள் திரும்ப உன்னிடம் சேருகின்றன. அது உனக்குத் துன்பமாக அமையவில்லையா? சத்தத்தை நோக்கி எதிரொலி வருவதுபோல, பொருளைத் தொடர்ந்து நிழல்வருவது போல, துன்பம் தருபவனைத் தொடர்ந்து துன்பம் வரும்!" புத்தர் போக்கிரியை நோக்கிச் சொன்னார். போக்கிரி செயலற்று நின்றான்.

புத்தர் தன்னருகில் இருந்த கூட்டத்தினருக்குச் சொன்னார். "கயவன் ஒருவன் தூய்மையாளனை இழிவுபடுத்தப் பேசுவது, வானத்தின்மீது எச்சில் துப்ப முயலுவதை ஒக்கும். இவன் துப்புவதால் வானம் களங்கமடைந்துவிடாது; மாறாக துப்பிய எச்சில் துப்பியவன் முகத்தின்மீது திரும்ப வந்துவிழும். நேர்மையாளர்மீது இழிவு சொற்களை வீசுபவன், காற்றுக்கு எதிராக நின்று புழுதியை எடுத்து எறிபவன்போலிருக்கிறான். வீசியவன்மீது புழுதி படியும். தூய்மை உள்ளத்தினரை இழிவுசொற்கள் வருத்தாது, மாறாக வீசியவர்களைத் திரும்பி வந்து அவை வருத்துகின்றன"

**மலாயா தமிழர்களுக்கு ஓர் நற்செய்தி!**

எம்மொழியிலும் சிறந்த மும்மொழியின் ஏடுகளை செம்மையதாய் விற்பனைக்கு வைத்திருக்கும்—அவ்வை
அருமைபெரு நூல் நிலையம் ஒன்றே இக் கம்பாரில் பெருமையுடன் வாங்க! வருக!!

அன்பர்களே! வணக்கம். எங்களிடம்,

* அறிவு பெற அறிஞர்களின் இலக்கிய இதழ்கள்!
* கருத்துற கவிஞர்களின் காவிய ஏடுகள்!
* அன்றாட நிகழ்ச்சிகளை உடனுக்குடன் தாங்கிவரும், ஆங்கில, மலாய், தமிழ், தினசரி ஏடுகள்
* குடும்பங்களுக்குப் பிடித்த முதல்தரமான கதைப் புத்தகங்கள்!
* குழந்தைகளின் உள்ளங்களை குளிரவைக்கும், திங்கள்-வார இதழ்கள்; நகைச்சுவை ததும்பு சிறுகதைப் புத்தகங்கள்!
* பாலர் வகுப்பிலிருந்து, மேல் வகுப்புவரை பயன்படுத்தும் பள்ளிக்கூடப் புத்தகங்கள்!
* சினிமா சம்பந்தமான சிறுகதைகளைத்தாங்கி வெளிவரும் திங்கள் வார இதழ்கள், வசனம் பாட்டுப் புத்தகங்கள்!

முதலியனவும், இன்னும் இதில் குறிப்பிடாத பிரபல வரலாற்று ஏடுகளும் கதைப் புத்தகங்களும் மொத்தமாகவும் சில்லரையாகவும், குறைந்த விலைக்குக் கிடைக்கும்.

குறிப்பு:—தையல் வேலைகளும் செய்துகொடுக்கப்படும்.

N. B. விவரங்களுக்கு — **அவ்வை புத்தக நிலையம்.**
142, ஜாலன் இட்ரிஸ், கம்பார், (மலாயா)

உரிமையாளர்:—கோ. வரதராசன். டெலிபோன் நெ. 22

**AVVAI BOOK STALL**
142, JALAN IDRIS, KAMPAR, PERAK, MALAYA.

---



தமிழ் நாட்டில் தலை சிறந்த

# வெண்சங்கு சீயக்காய்தூள்

எங்கும் கிடைக்கும்

எங்களிடம் தயாராகும் மணத்தில் சிறந்த

**செல்வம்—ராணி ஊதுபத்திகளை**

வாங்கி உபயோகியுங்கள்

தயாரிப்பாளர்:- வெண்சங்கு சீயக்காய்தூள் தொழிற்சாலை
**3037-38, டபீர் குளம் ரோடு, தஞ்சாவூர்.**

"மன்றம்" அச்சகத்தில் (26, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை-1)
ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன், எம். ஏ. அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகி...

